# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தற்கால மக்களின் ஆன்மிக மறுமலர்ச்சிக்கு ஏற்ற வகையில் பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர் காட்டிய வழியில் மத உண்மைகளை இந்த மாதப் பத்திரிகை வெளியிட்டு வருகிறது.

சந்தா விவரம்

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 12 |
| ஆயுள் சந்தா | ரூ. 150 |
| தனிப் பிரதி | ரூ. 1-20 |

*ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.*

*வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.*

<u>வேண்டுகோள்</u>

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தேவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.

தொலைபேசி :
71231



விவரங்களுக்கு :
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

புதிய நூல்! வெளிவர இருக்கிறது!

# ஸ்ரீராமகிருஷ்ணரின் அமுதமொழிகள்

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள் அனைத்தும் மூன்று தொகுதிகளில் வெளிவர இருக்கின்றன. ஒவ்வொரு தொகுதியும் 600 பக்கங்களுக்கும் அதிகமாக இருக்கும் என்று எதிர் பார்க்கப்படுகிறது.

டெம்மி சைஸில் நல்ல அச்சு, அழகிய காலிகோ பைண்டு, பிளாஸ்டிக் கவருடன் ஒவ்வொரு தொகுதியும் அமைந்திருக்கும்.

மூன்று பாகங்களும் வெளிவந்ததும் அவற்றின் விலை ரூ. 100.

முன்கூட்டியே பதிவு செய்துகொள்பவர்களுக்கு மூன்று பாகங்களும் சேர்ந்த சலுகை விலை ரூ. 50 மட்டுமே.

மூன்று தொகுதிகளும் சேர்ந்த ஒரு செட் ரூ. 50 என்ற சலுகை இந்த ஆண்டு இறுதிவரை (31-12-82) உண்டு. இதுவரை பதிவு செய்துகொள்ளாதவர்கள் பணம் ரூ. 50 அனுப்பித் தங்கள் பெயரைப் பதிவு செய்துகொள்ளவும்.

ரூ. 50 யை மொத்தமாகவோ இரண்டு அல்லது மூன்று தவணைகளிலோ செலுத்தலாம். மணியார்டர் அல்லது காசோலையைப் பின்வரும் முகவரிக்கு அனுப்பவும்.

மேனேஜர்
**ஸ்ரீராமகிருஷ்ண மடம்**
மயிலாப்பூர், சென்னை-600 004

ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 62 | அக்டோபர்—1982 | இதழ் 10

பொருளடக்கம்

## ஒரு முக்கிய வேண்டுகோள்

அன்புள்ளம் கொண்ட வாசகருக்கு,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. வணக்கம். ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் பத்திரிகையைப் பலரும் படித்துப் பயன்பெறச் செய்வது ஒரு நல்ல தெய்விகத் தொண்டாகும்.

அன்பர்கள் தங்கள் ஊரிலுள்ள வாசகசாலைகள், நூலகங்கள், உயர்நிலைப் பள்ளிகள், படிப்பகங்கள், சங்கங்கள் ஆகியவற்றை அணுகி அங்கெல்லாம் ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் வர வழைப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யக் கோருகிறேன். அல்லது ஆர்வம் உள்ள அன்பர்களைக் கொண்டு அவற்றுக்காகச் சந்தாத் தொகையைக் கட்டச் செய்யலாம்.

உங்கள் ஊரிலுள்ள உயர்நிலைப் பள்ளிகளுக்கு, நீங்கள் படித்த உயர்நிலைப் பள்ளிக்கு, உங்கள் ஊரிலுள்ள பொது நூலகத்திற்கு ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் அனுப்புவதற்குத் தாங்கள் சந்தா செலுத்தலாம். தங்கள் நன்கொடையாக அமையும் அதன்மூலம் பலரும் விஜயத்தைப் படிக்கும் வாய்ப்பு ஏற்படும்.

விஜயத்திற்குத் தனிப் பிரதி விற்பனை மிகவும் குறைவு. எனவே தங்கள் நண்பர்கள், உறவினர்கள் ஆகியோரின் மூலம் தங்கள் ஊரில் தங்கள் முயற்சியினால் குறைந்தது 20 புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துக் கொடுக்கும்படி கேட்டுக்கொள்கிறோம்.

விருப்பமுள்ள அன்பர்கள், சத்சங்கங்களுக்கும் பொது நூலகங்களுக்கும் விஜயம் பத்திரிகையை அனுப்புவதற்குத் தாங்களே பணம் செலுத்தலாம். உதாரணமாக, ஒருவர் ரூ. 120 அனுப்பினால் 10 சத்சங்கங்களுக்கு ஒரு வருடத்திற்கு விஜயம் அனுப்பப்படும். அவ்விதம் பத்திரிகை அனுப்பப்படும் சத்சங்கங்களின் முகவரிகள் பணம் அனுப்பியவருக்குத் தெரிவிக்கப்படும். அல்லது தாங்களே பத்திரிகை அனுப்ப வேண்டிய முகவரிகளைக் குறிப்பிட்டும் பணம் அனுப்பலாம்.

இதுபோன்று தாங்கள் வசிக்கும் மாவட்டத்தில் அல்லது தாலுக்காவில் உள்ள பொது நூலகங்களுக்கும் உயர்நிலைப் பள்ளிக்கும் தங்கள் நன்கொடையாக விஜயம் பத்திரிகையைத் தாங்கள் அனுப்பலாம்.

விஜயம் சந்தாதாரர்களை அதிகப்படுத்தும் தெய்வப் பணியில் எங்களால் இயன்ற முயற்சிகளைச் செய்து வருகிறோம். இது சம்பந்தமான எங்களின் இந்த வேண்டுகோளை, பெரியோர்கள் தங்களுக்கு ஏதோ சம்பந்தமில்லாதது என்று புறக்கணிக்காமல், மேலும் சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் தங்களால் இயன்ற எல்லா முயற்சிகளையும் ஊக்கத்துடன் அவசியம் மேற்கொள்ள வேண்டுகிறோம்.

*நிர்வாகி*

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்**

ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.
—திருமூலர்


| தொகுதி 62 | துந்துபி ஞு ஐப்பசி மீ | இதழ் 10 |
|---|---|---|





सरस्वत्यै नमो नित्यं भद्रकाल्यै नमो नमः ।
वेदवेदान्तवेदाङ्गविद्यास्थानेभ्य एव च ॥

ஸரஸ்வத்யை நமோ நித்யம் பத்ரகாள்யை நமோ நம: |
வேத - வேதாந்த - வேதாங்க - வித்யாஸ்தாநேப்ய ஏவ ச ||

சரஸ்வதிக்கும், பத்திரகாளிக்கும், வேதம், வேதாந்தம், வேதாங்கம் இருக்கும் இடங்களுக்கும்கூட எப்பொழுதும் நமஸ்காரம்.

மனத்தில் ஓர் தூய்மையில்லை;
வாயில் ஓர் இன்சொல் இல்லை;
சினத்தினுல் செற்றம் நோக்கித்
தீவிளி விளிவன் வாளா
புனத் துழாய் மாலையானே!
பொன்னிசூழ் திருவரங்கா!
எனக்கு இனிக் கதி என் சொல்லாய்!
என்னை ஆளுடைய கோவே.

—தொண்டரடிப்பொடியாழ்வார்

# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள்வாக்கு

**ஞாயிறு, செப்டம்பர் 28, 1884**

ஸ்ரீராமகிருஷ்ணர் (விஜயரைப் (பார்த்து): உங்களிடம் யோகம், போகம் ஆகிய இரண்டும் இருக்கின்றன. ஜனக மன்னரிடம் யோகமும் இருந்தது. போகமும் இருந்தது. ஆகவேதான் அவர் ஒரு ராஜரிஷியாக இருந்தார். அவர் அரசராகவும் அதே சமயத்தில் ரிஷியாகவும் விளங்கினார். நாரதர் தேவரிஷி ஆவார். சுகதேவர் பிரம்மரிஷி ஆவார்.

சுகதேவர் பிரம்மரிஷியாக விளங்கினார் என்பது முற்றிலும் உண்மையாகும். அவரை ஞானி என்று மட்டும் அவ்வளவு சாதாரணமாகச் சொல்லக்கூடாது. ஞானமே உறைந்து ஆன மூர்த்தி, பிரம்மசொரூபமாகவே திகழ்ந்தவர் என்றே அவரைச் சொல்ல வேண்டும். சாதாரண ஞானி என்று யாரைச் சொல்லலாம்? அரும் பாடுபட்டுக் கடுமையாகப் பல தவங்கள் செய்தது காரணமாக ஆத்மஞானம் அடைந்த ஒருவரைச் சாதாரண ஞானி என்று சொல்லலாம். சுகதேவரோ ஞானமூர்த்தி, சித்கனம், அதாவது ஞானமே திரண்டு ஓர் உருவமாக விளங்கியவர். அவர் அரும்பாடு பட்டுச் சாதனை புரிந்ததனால் மட்டும் அவ்விதம் இருந்தார் என்பதில்லை. சாதாரண ஜீவர்களுக்கு ஜீவ வியக்தி இயல்பாக இருப்பதைப் போல, சுகதேவருக்குப் பிரம்ம சொரூபம் இயல்பாக இருந்தது.

இவ்விதம் சொல்லிக்கொண்டிருந்த ஸ்ரீகுரு தேவரின் மனம் புறவுலக நினைவுக்குத் திரும்பியது. ஆதலால் அவர் மேற்கொண்டு பக்தர்களுடன் தாராளமாக உரையாட ஆரம்பித்தார்.

கேசவசந்திர சேனரின் சகோதரருடைய மகனின் பெயர் நந்தலால். அந்த நந்தலாலும் மற்றும் பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த அன்பர்கள் சிலரும் குருதேவரின் அருகில் அமர்ந்திருந்தனர்.

ஸ்ரீராமகிருஷ்ணர் (விஜயர் மற்றும் சில பக்தர்களைப் பார்த்து): காளிதேவிக்கு நைவேத்தியமாகப் படைக்கப்பட்ட மதுபானத்தைக் கண்ணாடிப் புட்டியில் ஒரு பக்தர் இங்கே கொண்டு வந்திருந்தார். ஆனால் அதைத் தொடவும் என்னால் இயலாது.

விஜயர்: அப்படியா!

ஸ்ரீராமகிருஷ்ணர்: ஜகன்மாதாவைப் பற்றிய எண்ணம் உள்ளத்தில் தோன்றும்பொழுது நான் வெறி பிடித்தவன் போன்று ஆகி விடுகிறேன். சில சக்தி உபாசகர்கள் செய்வதைப் போல் மதுவை அருந்த வேண்டிய அவசியம் எனக்கு இல்லை. அம்பிகைக்கு அபிஷேகம் செய்த சரணாமிர்தத்தைப் பார்க்கும் போதே எனக்கு வெறி வந்துவிடுகிறது. அப்போது நான் ஐந்து புட்டி மதுவைக் குடித்தவன் போல ஆகிவிடுகிறேன். அது போன்ற தெய்விகப் பரவசநிலையில் ஒரு பக்தன் இருக்கும் போது அவனது உள்ளத்தில் இது உட்கொள்ளத்தக்க உணவு, இது உட்கொள்ளத் தகாத உணவு என்று வேறுபடுத்திப் பார்க்கும் எண்ணமே எழுவதில்லை.

நரேந்திரர்: சாப்பிடுவது சம்பந்தப்பட்ட வரையில், ஒருவனுக்குத் தற்செயலாக என்ன உணவு கிடைக்கிறதோ அதை அவன் ஏற்றுக் கொள்வதுதான் நல்லது.

ஸ்ரீராமகிருஷ்ணர்: இதெல்லாம் அவரவருடைய விசேஷ மனநிலையைப் பொறுத்து அமைகிறது. நீ சொல்வது ஞானமார்க்கத்தைக் கடைப்பிடிக்கும் சாதகன் ஒருவனுக்குப் பொருந்தும். ஒரு ஞானிக்கு எந்த விதமான உணவுக் கட்டுப்பாடும் இல்லை. எந்த உணவும் அவனைப் பாதிக்காது. உணவு சம்பந்தமான விதிகளுக்கு அவன் அப்பாற்பட்டவன். பகவத்

கீதையின் கருத்துப்படி, ஒரு ஞானி தான் சாப்பிடுவதே இல்லை; அதாவது தான் சாப்பிடும் உணவுக்குத் தன்னை அவன் போக்தா வாகக் கருதுவதே இல்லை. தனக்குள் இருக்கும் குண்டலினிக்கு ஆஹுதி அளிப்பதாகவே கருதி ஞானி உணவு உட்கொள்கிறான். ஆனால் இது ஒரு பக்தனுடைய விஷயத்தில் பொருந்தாது. என்னுடைய இப்போதைய மனநிலையில், விதி முறைகளுக்கு இணங்க, பகவானுக்கு நைவேத் தியமாகப் படைக்கப்பட்ட உணவையே நான் உட்கொள்ள முடியும்; அவ்விதமின்றி வேறு வகையான உணவை என்னால் உட்கொள்ள இயலாது. முன்பு ஒரு சமயம் என் மனநிலை வேறு ஒருவிதமாக இருந்தது. அப்போது தட்சிணே சுவரத்தின் எதிர்க்கரையில் பிணங்கள் எரிக்கப் பட்டு வந்தன. அதிலிருந்து கிளம்பிய நாற்றம் காற்றில் கலந்து இந்தப் பக்கமாக வந்து வீசும். அதை நான் பிடிப்பேன். அந்தக் காலத்தில் அந்த நாற்றம் எனக்கு மிகவும் பிடித்திருந்தது.



ஆனால் இப்போதோ நல்லொழுக்கம் இல்லாத வர்களிடமிருந்து என்னால் உணவு ஏற்க இயலு வதில்லை. எனினும் ஏதோ சிற்சில சமயங்களில் எல்லோரிடமிருந்தும் உணவு ஏற்றுக்கொள் கிறேன்.

முன்பு ஒரு நாள் கேசவசந்திரசேன் வீட்டில் ஒரு நாடகம் நடைபெற்றது. அந்த நாடகத்தைப் பார்ப்பதற்கு என்னையும் அங்கே அழைத்துச் சென்றிருந்தார்கள். அங்கு எனக்குப் பூரியும் உருளைக்கிழங்குக்கறியும் அவர்களால் கொடுக்கப் பட்டன. அவற்றை என்னிடம் கொண்டுவந்து கொடுத்தவன் வண்ணானா நாவிதனா என்பது

> துக்கமும் துயரமுமே நிலையானவை என் பதை நிருபிப்பது போல, ஊருக்கு ஊர் மயான மும் இருக்கிறது. மரணம் என்பது அவ்வளவு நிச்சயமான காரியம். இதுதான் உலகம்; இவ்வளவுதான் வாழ்க்கை. —பகீரதன்

எனக்குத் தெரியாது. (எல்லோரும் சிரித்தனர்.) அதைச் சிறிதளவு சாப்பிட்டேன். அந்தப் பட்சணத்தைச் சாப்பிடும்படி ராக்கால் என்னிடம் சொன்னான்.

(நரேந்திரனைப் பார்த்து): நீ நடந்துகொள்வது உனக்கு முற்றிலும் பொருத்தமானதாக இருக்கிறது. நீ உலக வாழ்க்கையிலும் இப்போது இருக்கிறாய்; அதே சமயம் ஆன்மிக வாழ்க்கை யிலும் இருக்கிறாய். ஆகவே நீ உணவு சம்பந்த மான எந்த விதியையும் பின்பற்றாமல் எல்லா வற்றையும் சாப்பிடலாம். (பக்தர்களைப் பார்த்து): ஒருவன் பன்றிமாமிசம் சாப்பிடுபவனாக இருக்கலாம்; எனினும் அவன் தீவிர அருள்தாகம் கொண்டவனாக இருப்பானானால் அவனே பாக்கிய சாலி ஆவான். மற்றொருவன் தூய ஹவிஷ்ய அன்னத்தை* மட்டுமே உட்கொள்பவனாக இருக்கிறான் என்று வைத்துக் கொள்வோம். அப்படி அவன் ஹவிஷ்ய அன்னத்தை உட்கொள் வதற்கு இடையிலும் அவனது உள்ளம் காமினி காஞ்சனத்தில் உழலுமானால், அவன் இகழத் தக்கவனே ஆவான்.

ஸ்ரீராமகிருஷ்ணர்: கொல்லன் ஒருவனுடைய வீட்டில் சமைக்கப்பட்ட பருப்பைச் சாப்பிட வேண்டும் என்ற ஆசை எனக்கு ஒரு தடவை ஏற்பட்டது. 'பிராம்மணர்களுக்கு எங்களைப் போல நன்றாகப் பருப்புச் சமைக்கத் தெரியுமா என்ன?' என்று கொல்ல ஜாதியைச் சேர்ந்தவர் சொல்வதை என் சிறுவயதிலிருந்தே நான் கேட்டு வந்திருக்கிறேன். ஆகவேதான் கொல்லர் வீட்டினர் சமைத்த பருப்பைச் சாப்பிட்டேன். ஆனால் அந்தப் பருப்பில் கொல்லர் மணம், கொல்லர் வாசனை வீசியது. (எல்லோரும் சிரித்தனர்.)

---

* அரிசி, காய்கறிகள் ஆகியவற்றை மட்டும் வேகவைத்து நெய்கலந்து உட்கொள்ளும் உண விற்கு ஹவிஷ்ய அன்னம் என்று பெயர்.

கோவிந்த ராயினிடமிருந்து அல்லா மந்திரத்தை* உபதேசமாகப் பெற்றேன். அப்போது காளிகோயிலை அடுத்திருந்த ஒரு பெரிய பங்களாவில் எனக்காக வெங்காயம் கலந்த சாதம் சமைத்தனர். அதில் கொஞ்சம் சாப்பிட்டேன். வராக நகரத்தில் மணி மல்லிக்குத் தோட்டம் சூழ்ந்த ஒரு பெரிய வீடு இருக்கிறது. அந்த வீட்டில் ஒரு சமயம் உப்புக் காரம் கலந்த உணவை உட்கொண்டேன். ஆனால் அந்த உணவு என்னவோ ஒரு மாதிரி அருவருப்பாகவே இருந்தது.

என் சொந்த ஊராகிய காமார்புகூருக்கு நான் சென்றிருந்தேன். அங்கிருந்த ராம்லாலின் தந்தை, பொருந்தாத உணவுகளை நான் உட்கொண்டதைக் கேள்விப்பட்டு மிகவும் பயந்துவிட்டார். யார் வீட்டில் வேண்டுமானாலும், எந்த உணவை வேண்டுமானாலும் நான் சாப்பிட்டுவிடுவேன் என்று நினைத்து அவர் பயந்தார். ஊரார் என்னை ஜாதிப் பிரஷ்டம் செய்துவிடுவார்கள் என்ற அச்சம் அவருக்கு ஏற்பட்டது. எனவே நான் காமார்புகூரில் அதிக நாள் தங்கியிருக்க இயலவில்லை. விரைவில் புறப்பட்டு வந்துவிட்டேன்.

சுத்தமான உணவு எது என்பதைப்பற்றி வேதங்களும் புராணங்களும் சொல்லியிருக்கின்றன. எந்த உணவு வகைகளை வேதங்களும் புராணங்களும் அசுத்தமானவை என்று கூறித் தவிர்க்கும்படி கட்டளையிடுகின்றனவோ, அதே உணவு வகைகளை நல்லவை என்று தந்திர சாஸ்திரங்கள் கூறுகின்றன.

* ஸ்ரீகுருதேவர் தாம் இஸ்லாம் சாதனம் பழகியபோது நடைபெற்றதை இங்கே குறிப்பிடுகிறார். அல்லா மந்திரம் என்பது இஸ்லாமியருக்கு உரியது.

---

ஒரு நீதிக்கதை :

## தீர்த்த யாத்திரை

சி. வி. சிவராமகிருஷ்ணன்



**கோ**ரா கும்பார் என்ற மகான் ஒருவர் இருந்தார். அவரிடம் சிலர் அணுகி, ''நாங்கள் தீர்த்த யாத்திரை செய்வதாக இருக்கிறோம். தாங்களும் எங்களுடன் வாருங்கள்'' என்று அழைத்தனர்.

கோரா கும்பார் அந்த அன்பர்களிடம் ஒரு பாகற்காயைக் கொடுத்து, ''நீங்கள் மூழ்கும் புனிதத் தீர்த்தங்கள் எல்லாவற்றிலும் இந்தப் பாகற்காயையும் முக்கி எடுத்து வாருங்கள். அதை எனக்குக் கொடுங்கள், போதும்'' என்று சொல்லி அனுப்பினர்.

அன்பர்கள் யாத்திரை முடிந்து திரும்பி வந்து கோராவிடம் பாகற்காயைத் தந்து, ''தாங்கள் கூறியபடியே இந்தப் பாகற்காயைப் பல புனிதத் தீர்த்தங்களில் முக்கி எடுத்துக்கொண்டு வந்திருக்கிறோம்'' என்றனர்.

கோரா அந்தப் பாகற்காயை நறுக்கிச் சிறு சிறு துண்டுகளாக்கினர். அவற்றை அந்த அன்பர்களிடம் கொடுத்து உட்கொள்ளும்படி கூறினர்.

வந்தவர்கள் அந்தப் பாகற்காயை வாயிலிட்டுப் பாகற்காயின் கசப்பைச் சகிக்க முடியாமல் துப்பிவிட்டனர்.

அப்போது கோரா அந்த அன்பர்களிடம், ''இவ்வளவு புனிதத் தீர்த்தங்களில் மூழ்கியும் பாகற்காய் தன் இயல்பான கசப்பை இழக்கவில்லை. அது போலவே நாமும் எவ்வளவு யாத்திரைகளை மேற்கொண்டாலும் இழிந்த குணங்களாகிய காமம் கோபம் பொறாமை முதலிய கசப்பை நீக்கிக் கொள்ளும் வரையில் மனம் தூய்மையடையாது. தூய்மையற்ற உள்ளத்தில் கடவுள்தரிசனம் ஏற்படாது. மனத்தூய்மைக்கு இறைவனிடம் ஆழ்ந்த ஈடுபாடும் சுயநலமற்ற பக்தியுமே சாதனங்கள். இவற்றைப் பயிலுங்கள்'' என்று சொல்லி அனுப்பினர்.




## நமச்சிவாய வாழ்க !

சிவபெருமானின் நீக்கமற்ற நிலையை உணர வேண்டுமானுல் அதற்கு ஓர் எளிய வழி அவனது திருஐந்தெழுத்தின் இயல்பை உணர்ந்து ஓதுவதேயாகும்.

ஐந்தெழுத்து, பஞ்சாட்சரம், மூல மந்திரம், தாரக மந்திரம் என்று கூறப்படுவதெல்லாம் சிவபஞ்சாட்சரமேயாகும். 'சிவாய நம:' என்னும் திருமந்திரத்தை இடையருமல் ஜபித்தால், செம்பு பொன்னுவது போல், உயிர் சிவமாம் தன்மை பெறும். இந்த மந்திரத்தின் பயனை மற்றவர்கள் சொல்லக் கேட்டு உணர முடியாது, அனுபவிக்கவும் முடியாது. இந்த மகாமந்திரத்தைக் குருமூலமாக உபதேசமாகப் பெற்று, அதன் பொருளை உணர்ந்து ஒருமனதுடன் இடையருமல் நாத்தழும்பேற ஜபித்தால் இறைவனின் திருவடிப்பேறு கிடைப்பது உறுதி.

திருஐந்தெழுத்து என்பது 'சி-வா-ய-ந-ம:' என்ற ஐந்தெழுத்தைக் குறிக்கும். இது சிவனின் திருப்பெயர்களில் ஒன்ருன 'நமச்சிவாய' என்பதில் உள்ள எழுத்துக்களேயாகும். ஒவ்வோர் எழுத்தும் வெறும் எழுத்தாக இல்லாமல், ஒவ்வொரு பொருளைக் குறித்து நிற்கும் பெயராகும். சி என்பது சிவ பரம் பொருளையும், வா என்பது அருளை (சக்தி)யும், ய என்பது உயிரையும் (ஆன்மாவையும்), ந என்பது மறைப்புச் சக்தி அதாவது திரோதான சக்தியையும், ம என்பது மலத்தையும் குறித்து நிற்கின்றன. இந்த ஐந்தெழுத்தே அயன் அரி அரன் ஈசன் சதாசிவன் இவர்களின் மூலம் முறையே அகங்காரம், புத்தி, மனம், சித்தம், உள்ளம் இவற்றை நடத்தி எங்கும் பூரணமாக நிறைந்து வியாபித்து நிற்கிறது.

திருஐந்தெழுத்தை இடைவிடாமல் எண்ணிஞல் சிவத்துக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பும், சிவத்துக்கும் உலகுக்கும் உள்ள தொடர்பும், அந்தத் தொடர்பு உண்டான காரணமும், அதனுல் விளையும் பயனும் நம் எண்ணத்திற்கு வந்து, இறைவனின் திருவருள் நிழலை விட்டு நீங்காது நிற்கும் நிலையைக் கைவரச் செய்யும்.

மணிவாசகப் பெருமான் திருவாசகத் தொடக்கத்தில் எடுத்தவுடனே 'நமச்சிவாய வாழ்க' என்றே தொடங்குகிருர். ஏனெனில் மங்கலச் சொல் அனைத்திற்கும் தலையாயதாக இருப்பதனுலும், தான் மங்கலமாக இருப்பது மட்டுமின்றித் தன்னை ஜபிப்பவர்களுக்கும் பெருமங்கலத்தைத் தரவல்லதான சிவத்தை வாழ்த்துகிருர். நாம் வாழ்த்தித்தான் சிவம் வாழ வேண்டும் என்பதற்காக அல்ல, நாம் வாழ்வதற்காகவே சிவனை வாழ்த்துகிருேம்.

திருவைந்தெழுத்தின் சிறப்பைக் கூற வந்த ஞானசம்பந்தர், 'வேதத்திற்கு வித்தாய் உள்ளது பஞ்சாட்சரமே' என்று கூறுகிருர். இதனை, ''வேதம் நான்கினும் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் நமச்சிவாயவே'' என்று சிறப்பித்துப் பேசுகின்ருர். திருநாவுக்கரசப் பெருமானும், ''கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணை யாவது நமச்சிவாயவே'' என்று, 'திருஐந்தெழுத்தே எல்லாவற்றிற்கும் மேலான துணை' என்று கூறுகிருர்.

திருஐந்தெழுத்தில் ஐந்து வகை உண்டு. இவற்றில் நியமமாக உச்சரிக்க வேண்டியது தூலம், சூட்சுமம், அதிசூட்சுமம் என்ற மூன்று முறையேயாகும். மற்ற இரண்டும் மெய்ஞ் ஞானிகளுக்கு மட்டுமே விளங்கக்கூடியதாகும்.

1. தூல பஞ்சாட்சரம்—'நமச்சிவாய' என்பதாகும். இதனைத் திருமூலர், ''நகார முதலாகும் நந்திதன் நாமமே'' என்கிருர். நகாரம் முதலாவதாக உள்ள தூல பஞ்சாட்சரத்தை ஓதுவதனுல், உலகியலைக் குறித்துப் போகத்தைக் கொடுப்பதும், திரோதையும் மலமும் இருப்பதை நமக்கு உணர்த்திப் பசுஞானத்தைத் தரவும் பயன்படுகின்றது. நம் நிலையை நாம் உணர்ந்தாலன்றிச் சிவனருள் கிடைக்காது. எனவேதான் இந்தத் தூல பஞ்சாட்சரம் முதலில் ஓதப்படுவதாயிற்று.



2. சூட்சும பஞ்சாட்சரம்—'சிவாய நம:' என்பது. இந்தச் சூட்சும பஞ்சாட்சரம் வீட்டியலில் திளைத்து முக்தியை அளிப்பதாகும். நம்மை உணர்ந்தபின் நம்மிடம் உள்ள குறைபாடு அகற்ற இறைவன் திருவருள் வேண்டும். எனவே திருவருளை அடையும்பொருட்டுச் சூட்சும பஞ்சாட்சரம் குருவால் உபதேசிக்கப்படுகிறது. இதை ஓதுவதனுல் பதிஞானம் அடைய ஏதுவாகிறது.

3. அடுத்து அதி சூட்சும பஞ்சாட்சரம்—'சிவாய சிவ' என்பது. இதனை இருதலை மாணிக்கம் என்றும், காரண பஞ்சாட்சரம் என்றும் கூறுவர். பதிஞானம் பெற்ற ஆன்மா மீண்டும் பிறவிக்கு வராமல் தடுக்க, அதிசூட்சும பஞ்சாட்சரமான 'சிவாய சிவ' என்பதைக் குரு உபதேசிக்கிருர். இந்தப் பஞ்சாட்சரம் மறைப்புச் சக்தியும், மலமும் (நம:) நீங்கி, ஆன்மா சிவனையும் அருளையும் முன்னும் பின்னும் சூழநின்று யகாரம் நடுவிருக்க அமைந்த மந்திரமாகும். இதனை உள்ளத்தில் உன்னுதல் சிறப்பென்பர். இது சாதாரணமானவர்களுக்கு உபதேசிக்கப்படுவதில்லை. பக்குவ ஆன்மாக்களுக்கே உணர்த்தப்படுகின்றது.

> ஒரு பூண்டின் வாழ்வுக்கான முழு வளர்ச்சியின் பயனை, ஒரு சிறுபுட்டி நன்மருந்து, நமக்கு வேண்டும்போது தரக் காத்திருக்கிறது. அது போல, ஒரு சிறந்த அறிஞனின் முழு வாழ்க்கையின் பயனை ஒரு நூல் நமக்கு வேண்டும் போது தரக் காத்துக்கொண்டிருக்கின்றது.
>
> —மில்டன்

இதற்கு அடுத்த மகா காரணம், மகா மனு இவை முறையே 'சிவ', 'சி' என்பவையாகும். இதனைக் குருமூலம் உணர்தலே சிறப்பு.

இனி, பஞ்சாட்சரத்தை விதிப்படி எண்ணும் முறை மூன்று வகைப்படும். அவை மானதம், மந்தம், உரை என்பன. மானதம் என்பதற்கு உபாஞ்சு என்று ஒரு பெயர் உண்டு. இது மனதால் தியானித்தல். மந்தம் என்பதற்கு வாசகம் என்றும் பாஷ்யம் என்றும் பெயர். இது சூட்சும வைகரி வாக்கால் தன் செவிக்கு மட்டும் கேட்கும்படி உச்சரித்தல். உரை என்பது, ஸ்தூல வைகரி வாக்கால் தனக்கும் பிறருக்கும் கேட்கும்படி உச்சரித்தல். இவை மூன்றினுள் மனதால் கணித்தலான மானதமே சிறந்த பலனைத் தர வல்லது. உரை நூறு மடங்கு பலனையும், மந்தம் பதினுயிரம் மடங்கு பலனையும், மானதம் கோடி மடங்கு பலனையும் தரக்கூடியது.

இந்தப் பஞ்சாட்சரப் பெருமையை வலியுறுத்தவே ஞானசம்பந்தர் இரண்டு பஞ்சாக்கரப் பதிகங்களையும், திருநாவுக்கரசர் ஒரு பஞ்சாக்கரப் பதிகத்தையும், சுந்தரர் ஒரு பஞ்சாக்கரப் பதிகத்தையும் பாடியுள்ளனர்.

இந்த மந்திரத்தை ஜபிக்கும்போது அன்றலர்ந்த புதிய மலரினின்றும் ஒழுகுகிற தேனினை ஒப்ப இன்பம் அளிப்பதாகும். பக்திசிரத்தையுடன் இந்த ஓசை தரும் அஞ்செழுத்தை நெஞ்சிலழுத்தி உச்சரித்தால் பலவகைப்பட்ட துன்பங்களும் நிவர்த்தியாகும். சித்தம் சுத்தி பெறும். மலபரிபாகமும் சிவஞானமும் உண்டாகும்.

''தீவினையாகிய விஷத்தைக் களைவதற்கு ஒரு மருந்து உண்டு. அந்த மருந்து ஏனைய மருந்து

போல் உடலுக்குள் செல்ல வேண்டியதில்லை. வாயிலே வைத்தாலும் போதும்; உடனே அது பிறவிநோயையும் தீர்க்கும். அந்த மருந்துதான் இறைவன் திருநாமமாகிய ஐந்தெழுத்து'' என்கிறார் நக்கீரதேவர்.

ஔவையாரும், ''சிவாயநம என்று சிந்தித்து இருப்போர்க்கு அபாயம் ஒருநாளுமில்லை'' என்கிறார். மந்திரங்களுள் சிறந்தது திரு ஐந்தெழுத்து. ஏனைய மந்திரங்களைப் பிரணவம் சேர்த்து உச்சரித்தால்தான் பலன் உண்டு. இந்த மந்திரத்தைப் பிரணவத்தோடும் உச்சரிக்கலாம்; பிரணவம் இன்றியும் உச்சரிக்கலாம். பிரணவம் சேர்த்தால் 'சடட்சரம்' என்ற ஆறெழுத்து மந்திரமாகிறது.

'ஐந்து திருவுருவங்களைப் பெற்ற ஐந்தெழுத்தை உச்சரிப்பவர்கள் இறைவனாகவே கருதப்படுவர்' என்றும், 'அத்தகையோரை மனதால் நினைத்தால் பிறவிப்பிணி நீங்கும்' என்றும் உபதேச காண்டம் கூறுகிறது.

சமாதிநிலை அடைய இயலாத சிவயோகியரும் திருஐந்தெழுத்தை விதிப்படி ஓதினால் வீடு பெறுவர் என்பது பனுவல் துணிபாம். எனவே சிவத்தைப் பேணி ஞானவரம்பாகிய மோனத்தைப் பெற்று முக்தி அடைவோம். •

---

ஒரு நீதிக் கதை :

# பெரியோர் உள்ளம்

'ஸ்ரீராமதாசன்'



நம்பிள்ளை ஸ்ரீரங்கத்தில் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்தார். அப்போது அவரை நாடி மக்கள் பெருந்திரளாக வந்தார்கள்.

அதே காலத்தில் கந்தாடை தோழப்பர் என்பவரும் ஸ்ரீரங்கத்தில் விரிவுரைகள் நிகழ்த்தி வந்தார்.

கந்தாடை தோழப்பர் நிகழ்த்திய விரிவுரைகளுக்கு மக்கள் குறைவாகவே வந்தார்கள். இத்தனைக்கும் கந்தாடை தோழப்பர் பெரிய அறிவாளி; சகல சாஸ்திரங்களும் கற்றுத் தேர்ந்தவர்.

நம்பிள்ளை மீது பொருமை கொண்ட கந்தாடை தோழப்பர், ஒரு நாள் பெருமாள் சந்நிதியில் வழிபடுவதற்கு வந்த நம்பிள்ளையை மனம் போனபடி தூற்றிவிட்டார். அத்தனைக்கும் பதில் பேசாமல் நின்றிருந்தார் நம்பிள்ளை. உயர்குணங்கள் நிரம்பப்பெற்ற அவர் தலைகவிழ்ந்து நின்றிருந்தார்.

பிறகு கந்தாடை தோழப்பர் தம் மாளிகைக்குத் திரும்பிச் சென்று நிதானமாக யோசித்த போது, அவர் செய்த குற்றம் அவர் மனதைப் பெரிதும் வருத்தியது. 'நல்ல பக்தரைப் புண்படும்படி பேசி பாகவத அபசாரம் செய்துவிட்டேனே!' என்று அவர் கலங்கினார். அவமானத்திற்கு அஞ்சி, இருட்டியபின் நம்பிள்ளையைச் சந்தித்து மன்னிப்புக் கேட்பது என்று முடிவெடுத்தார்.

அதே போல் மாலை சாய்ந்து இருட்டியதும் வாசல் நடைவரை வந்தார். திண்ணைக்கு அருகில் யாரோ நிற்பதைக் கண்டதும் யாரென்று விசாரித்தார். அந்த உருவம் அவரை அணுகி அவர் திருவடிகளில் வீழ்ந்து வணங்கியது. ''சுவாமி, என்னை மன்னித்துவிடுங்கள். எல்லாக் குற்றங்களையும் செய்தவன் நான்தான்'' என்று அலறியது.

கந்தாடை தோழப்பர் பதறிப்போய் அந்த உருவத்தைப் பற்றித் தூக்கினார். அந்த உருவம் வேறு யாருமில்லை, நம்பிள்ளையேதான்.

''சுவாமி! என்ன இது? குற்றம் என்னுடையது அல்லவா? நான்தானே தங்களிடம் மன்னிப்புக் கேட்க வேண்டும்?'' என்று நம்பிள்ளையிடம் கூறினார் கந்தாடை தோழப்பர்.

அதற்கு மகானாகிய நம்பிள்ளை, ''அடியேன் ஒருவன் பிறக்காமல் இருந்திருந்தால் தாங்கள் இப்படி அபசாரப்படும்படி நேர்ந்திருக்காது அல்லவா? ஆக, பிழை என்மேல்தான்'' என்று பதில் தெரிவித்தார்.

''தாங்கள் அல்லவா உத்தமர்!'' என்று சொல்லி, நம்பிள்ளையை மார்புறத் தழுவிக் கொண்டார் கந்தாடை தோழப்பர்.

மன்னிப்பது மனிதத்தன்மை; மறப்பதோ தெய்வத்தன்மை என்பது இதனால் விளங்குகிறது.

தன்மீது குற்றமில்லாத நிலையிலும் பிறர் தன்னைத் தூற்றும்போது அதை அந்த நேரத்தில் வாதாடாமல் மௌனமாக ஏற்றுக்கொள்வதே வைஷ்ணவனின் லட்சணம் ஆகும்.

---

# தீபாவளி

'தேவானும் பிரியன்'

ஐப்பசி மாதம் அமாவாசைக்கு முன் வரும் திரயோதசி, சதுர்த்தசி, அமாவாசை, அதை அடுத்த பிரதமை ஆகிய நான்கு நாட்கள் தீபாவளியோடு தொடர்பு கொண்டவை. இந்த நான்கு நாட்களில் தென்னாட்டில் உள்ளவர்கள் திரயோதசியையும் சதுர்த்தசியையும் முதன்மையாகக் கொண்டு அவற்றில் தீபாவளியைக் கொண்டாடுகின்றார்கள். அமாவாசை, பிரதமை திதிகளை முதன்மையாகக் கொண்டு குஜராத் மாநில மக்கள் தீபாவளியைக் கொண்டாடுகின்றார்கள். அன்று அவர்கள் புதுக் கணக்கைத் துவங்குவார்கள்.

'தமஸோ மா ஜ்யோதிர் கமய—இருளிலிருந்து என்னை வெளிச்சத்திற்கு இட்டுச் செல்வாயாக' என்று வேண்டுகிறார் ஒரு வேதரிஷி. அஞ்ஞானம், பசிப் பிணி, துன்பம், நோய், பயம் ஆகிய இருளிலிருந்து விடுபட்டு, உடல்வலிமை, செல்வச்செழிப்பு, மனநிறைவு கொண்ட ஆன்மிக ஆனந்தத்துடன் வாழ்கிற ஒளிமிகுந்த வாழ்க்கைக்கு அழைத்துச் செல்ல வேண்டுகிறார். ஆம், பரிணாம வளர்ச்சியில் மனித இனத்தின் நாட்டம் ஒளிமிகுந்த மெய்யறிவைத் தேடுவதேயாகும்.



இதை நாம் நினைவுபடுத்திக் கொள்வதற்காகவே தீபத் திருவிழாக் கொண்டாடுகிறோம். 'எங்கும் ஒளி, எதிலும் ஒளி' என்று வாழ்க்கை முழுவதும் ஒளிமிகுந்ததாக இருக்க வேண்டும் என்பதற்காக, நமது இல்லங்களில் தீபங்களை வரிசையாக அடுக்கி வைத்து, தீபாவளி விழாக் கொண்டாடுகிறோம்.

இந்து சமுதாயத்தின் அனைத்துப் பிரிவினர்களாலும் தீபாவளிப் பண்டிகை கொண்டாடப் பெற்று வருகிறது. இந்தப் பண்டிகையைக் கொண்டாடப் பலவேறு காரணங்களும், இது உருவெடுத்த விதம்பற்றிப் பலவேறு கதைகளும் தொன்றுதொட்டு வழக்கில் இருந்து வருகின்றன.

புராண வரலாறு

துருவாச முனிவரின் சாபம் காரணமாக, தேவேந்திரன் தன் பொலிவை இழந்தான் என்றும், அதை மீண்டும் பெறுவதற்காகத் தேவர்களையும் அசுரர்களையும் இணைத்துக்கொண்டு பாற்கடலைக் கடைந்தபொழுது அதில் மகாலக்ஷ்மி தோன்றிய தினமே தீபாவளி என்றும் சொல்லப்படுகிறது. மேலும், லக்ஷ்மியின் தோற்றத்தினால் இழந்த பொலிவை மீண்டும் பெற்ற தேவேந்திரன், செல்வத் திருமகளை வரவேற்க, தீபங்களை ஏற்றி விழாக் கொண்டாடும்படி கட்டளையிட்டான் என்றும், அது முதல் தீபாவளிப் பண்டிகை கொண்டாடப்பெறுகிறது என்றும் கூறப்படுகிறது.

பாற்கடலில் தோன்றிய லக்ஷ்மிதேவி விஷ்ணுவையே மணம்புரிந்துகொள்ள விரும்பினாள். ஆனால் திருமாலோ அவளுக்குத் தென்படாமல் பாற்கடலிலுள்ள திலகத்வீபம் என்ற சிறிய தீவில் போய் மறைந்துவிட்டார். அந்தத் தீவு எள் விளையும் செடிகளைக் கொண்டதாக இருந்தது. திருமால் தமது யோகமாயையினால் அந்தத் தீவையே ஒரு தைலமாக, நல்லெண்ணெய்ப் பிரதேசமாக மாற்றிவிட்டார். லக்ஷ்மிதேவி அந்த நல்லெண்ணெய் மடுவில் குதித்து மூழ்கி, விஷ்ணுவைக் கண்டுபிடித்து அவருக்கு மாலையிட்டுக் கல்யாணக் கோலத்துடன் கரைக்கு வந்தாள். இதைக் கண்ட தேவர்கள் மகிழ்ச்சி ஆரவாரம் செய்தனர். தேவர்களின் எதிரிலேயே மகாலக்ஷ்மிக்கும் மகாவிஷ்ணுவுக்கும் சாஸ்திர பூர்வமாகத் திருமணம் நடந்தேறியது.

ஐப்பசி மாதத்தில் அமாவாசைக்கு முன் தினம் கிருஷ்ணபட்சம் சதுர்த்தசியன்று உஷக் காலத்தில் இந்தத் திருமணம் நடந்ததாகவும், அந்தத் தினத்துக்கு லக்ஷ்மிபரிணய தினம் என்றே

பெயர் என்றும் விஷ்ணுபுராணம் கூறுகிறது. அந்தத் தினத்தை மங்களஸ்நானம் செய்து வீடு தோறும் கொண்டாட வேண்டும் என்று கூறப்படு கிறது. இவ்வாறு கொண்டாடுவது அலக்ஷ்மியை அதாவது வறுமையை விரட்டுகிற மங்கள காரியம் என்று கூறுகின்றனர்.



மேலும், லக்ஷ்மியின் வேண்டுகோளின்படி மகாவிஷ்ணு நரகாசுரனைக் கொன்று, அவன் சிறைப்படுத்தி வைத்திருந்த ஆயிரக்கணக்கான தேவகன்னிகைகளை மீட்டு விடுவிக்கிறார். அன்றைய புண்ணியதினத்தை 'நரக சதுர்த்தசி' என்று அழைக்கின்றனர். மேலும், நரகாசுரன் தான் அழிந்த நாளை மகிழ்வோடு கொண்டா டும்படி வேண்டியதால் அவ்வாறே செய்வதாக வும் கூறுவதுண்டு.

மகாவிஷ்ணு நரகாசுரனை அழிக்கச் சென்ற பொழுது, பாணாசுரன் முதலிய அசுரர்கள் லக்ஷ்மிதேவியைக் கவர்ந்துவரச் செல்கின்றனர். அதைக் கண்ட லக்ஷ்மிதேவி தன் உருவத்தைச் சூட்சுமமாகச் செய்துகொண்டு, அங்கே எரிந்து கொண்டிருந்த தீப ஜ்வாலையில் தன்னை மறைத்துக்கொண்டாள். அவ்வாறு அன்று லக்ஷ்மிதேவி தீபத்தில் தன்னை லயப்படுத்திக் கொண்டதனால், தீபங்களை வரிசை வரிசையாக ஏற்றித் தீபத்தில் லக்ஷ்மிதேவியைப் பூஜிக்க வேண்டும் என்று சாஸ்திரங்கள் சொல்லு கின்றன. எண்ணெய் மடுவில் லக்ஷ்மிதேவி பிரவேசித்ததனால் எண்ணெயிலும் லக்ஷ்மி விளங்குவதாக ஐதிகம். இத்தகைய மங்கல ஸ்நானத்திற்கு ஏற்ற நீரில் கங்காநதியும் விரும்பி வந்து கலந்துவிட்டாள். அதனால் தீபாவளி ஸ்நானத்தை, 'கங்காஸ்நானம்' என்று சொல்லுகிறார்கள்.

தீபாவளித் திருநாளை வாமன அவதாரத்துடன் இணைத்தும் ஒரு கதை வழக்கில் உண்டு. மூவுலகங்களையும் ஆண்டு வந்த அசுர சக்ரவர்த்தி யான மகாபலியை ஒடுக்குவதற்காக வாமனராகத் தோன்றிய திருமால், மூன்றடி மண் தானம் கேட்டு, அதைப் பெற்றவுடன், தமது விசுவ ரூபத்தை எடுத்து, இரண்டடிகளால் விண்ணையும் மண்ணையும் அளந்து, மூன்றாவது அடியை மகாபலியின் தலைமீது வைத்து, அவனை நரகத்தில் தள்ளுகிறார். அப்போது மகாபலி ஆண்டிற்கு ஒரு முறை பூவுலகிற்கு வர வரம் கேட்கின்றான். அவ்விதமே வரமளித்த திருமால், ஒளி இல்லாத இடத்தில் ஆட்சி செய்யும்படி அனுமதிக்கிறார். இந்தக் காரணத்தால் அந்த அசுர சக்ரவர்த்தி வருகின்றபொழுது தங்கள் இல்லத்தில் ஒளி இல்லாமலிருந்தால் அங்கே தங்கி ஆட்சி செய்வானோ என்று அஞ்சி, மக்கள் இல்லம்தோறும் ஒளியேற்றி வைக்கின்றனர்.

இதை வேறு விதமாகவும் கூறுவதுண்டு: அசுரனாக இருந்தபோதிலும் மகாபலி நீதிமானாக இருந்ததனால் அவனை வரவேற்க விளக்கேற்றிக் கொண்டாடுவதாகவும் கூறுவர். கேரளத்தில் ஓணம் பண்டிகை கொண்டாடுவது நினைவுகூரத் தக்கது.

தீபாவளிப் பண்டிகைக்குப் பூகோளரீதியான காரணமும் உண்டு: மழைக்காலம் முடிந்து, சரத்காலம் ஆரம்பமாகும் நேரம். சூரியன் துலா ராசியில் பிரவேசித்து, தெற்கு நோக்கி யாத்திரை புறப்படுகிற இந்த நாளில் இதுவரை மழை காரணமாக உலக விவகாரங்கள் தடைப்பட்டுப் பிறகு சரத்காலத்தில் ஒரு புதிய சைதன்யம் எல்லா இடத்திலும் தோன்றுகிறது. அப்போது எல்லாத் துறைகளிலும் வேலைகள் ஆரம்பமாகின் றன. இதுவே ஐப்பசி அமாவாசைத் தினத்தில் தீபத் திருவிழாவாக நடத்தப்படுகிறது.



மேலும் பல சரித்திரரீதியான காரணங்களையும் தீபாவளிப் பண்டிகை பற்றிக் கூறுவர். ஸ்ரீராமர்

வனவாசம் முடித்துப் பட்டணப் பிரவேசம் செய்த நாளே இந்த நாள் என்றும், பாரத மன்னன் விக்கிரமாதித்தியன் பட்டாபிஷேகம் செய்து கொண்ட நாளாகவும், சில வரலாற்று ஆசிரியர் களின் கருத்துப்படி ஸம்ராட் அசோகன் தனது திக்விஜயத்தை முடித்துக்கொண்டு இந்தத் தினத்தைத் தீபத் திருவிழாவாகக் கொண்டாடி ஞன் என்றும் கூறுகின்றனர்.

சீக்கியர்களைப் பொறுத்தவரை, அவர்களது ஆருவது குருவாகிய ஸ்ரீ ஹர கோவிந்தர் மொகலாய மன்னனுல் கைது செய்யப்பட்டு, மற்ற ஐம்பத்திரண்டு மன்னர்களுடன் சிறைப் பட்டிருந்தபோது, தமது புத்தி சாதுரியத்தினுல் தாமும் தப்பி, மற்றவர்களையும் காப்பாற்றியதைக் கொண்டாடுவதற்காகச் சீக்கியர் இந்தத் தினத்தில் தீபத்திருவிழாக் கொண்டாடுகிருர்கள்.

ஜைனர்களுக்கு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த நாள் தீபாவளி. அன்றைய தினம்தான் மகாவீரர் மகாநிர்வாணம் அடைந்தார். ஞான ஒளி மறைந்துவிட்டதனுல் செயற்கை ஒளியினுல் தான் உலகிற்கு வழிகாட்ட முடியும் என்று கருதி அவர்கள் தீபத் திருவிழாவைக் கொண்டாடு கின்றனர்.



இவ்வாறு பாரதம் முழுவதும் கொண்டாடப் படும் தீபாவளி பல சிறப்புக்களைக் கொண்ட தாகும்.

---

ஒரு நீதிக் கதை :

## பாலும் பூவிதழும்

**'அக்ஷயம்'**

துறவிகள் ஒரே இடத்தில் தங்காமல் ஊரூராகச் சுற்றிக்கொண்டே இருக்க வேண்டும் என்பது மரபு. ஆனுல் காசி, அயோத்தி, காஞ்சி போன்ற சில நகரங்கள் இதற்கு விலக்கு. இங்கே எவ்வளவு நாள் வேண்டுமானுலும் தங்கலாம்.

பழங்காலத்தில் ஒரு முறை அயோத்தியில் துறவிகள் கூட்டம் பெருத்துவிட்டது. புதிதாக வரும் துறவிகளுக்கு இடம் இல்லை என்ற நிலை. இப்படி ஒரு நிலையில் அயோத்தியின் எல்லையில் ஒரு துறவி வந்து தங்கினுர். அயோத்தியிலே நிரந்தர வாசம் செய்த வேறு துறவிக்கு இந்தச் செய்தி எட்டியது.

புதுத் துறவியை வரவேற்கிற சாக்கில், விளிம்பு வழியப் பால்பாத்திரம் ஒன்றை அனுப்பி வைத்தார். அது, 'தங்களுக்கு அயோத்தியில் இடம் இல்லை' என்பதைச் சூசகமாகத் தெரிவித்தது. விளிம்பைத் தொடும் பாத்திரத்தில் மேலும் பால் கொள்ளாது அல்லவா?

எல்லையில் தங்கியிருந்த துறவியை மக்கள் மாலைபோட்டு வரவேற்றிருந்தனர். அதுவும் கமகமவென்று மணக்கும் ரோஜாப்பூ மாலை. துறவி அந்த மாலையிலிருந்து ஒரு ரோஜா இதழை எடுத்தார். பால்பாத்திரத்தில் போட்டார். அது, பால் துளியும் சிந்தாமல் மேல்மட்டத்தில் மிதந்தது. அப்படியே அயோத்தித் துறவிக்குத் திருப்பி அனுப்பி வைத்தார்.

அதைக் கண்டதும் ஊர்த் துறவி அவரை வரவேற்க அவர் தங்கியிருந்த இடத்துக்கே வந்து விட்டார் ! காரணம், தம் வருகையினுல் அயோத்திக்குச் சிறிதும் சிரமம் ஏற்படாது என்பதை ரோஜா இதழ் மூலம் தெரிவித்ததே ஆகும்.





# நாம மகிமையும் ஜப விதியும்

சி. வி. சிவராமகிருஷ்ணன்

## இறைவனுடைய நாமங்களில் இரண்டு பகுதிகள்

இறைவனுடைய நாமங்களில் இரண்டு பகுதிகள் உள்ளன. இறைவனின் பெருமைகளை விளக்கும் பெயர்கள் ஒரு வகை; பீஜமந்திரமாக இறைவனுக்கு இயல்பாகவே அமைந்தது மற்றொரு வகை.

பீஜம் என்பது என்றைக்கும் அழியாத சநாதன வஸ்து அல்லது வித்து. எல்லாத் தெய்வங்களுக்கும் அவ்வவற்றிற்கென்று தனிப்பட்ட பீஜ மந்திரங்கள் அல்லது பீஜாட்சரங்கள் உண்டு. எல்லா பீஜாட்சரங்களிலும் உயர்ந்தது, ஓம் என்னும் பிரணவம். எல்லா பீஜாட்சரங்களையும் தன்னுள் அடக்கி விளங்குவது ஓம் என்னும் பிரணவம். 'ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம' என்பது உபநிஷத வாக்கு.

எனவே எந்த நாமத்தை ஜபத்துக்கென்று தேர்ந்தெடுத்தாலும் அதற்கு முன் ஓம் என்ற பிரணவத்தைச் சேர்த்துச் சொல்லும்படி பெரியோர் உபதேசிக்கின்றனர்.

தனி ஓங்கார ஜபம் சந்நியாசிகளுக்கு மட்டுமே விதிக்கப்பட்டிருக்கிறது. பிரம்மசாரி, இல்லறத்தார் என்ற இருவருக்கும் காயத்திரி பொது.

அர்ச்சனைக்கென்று நாம் சொல்லும் இறைவனின் நாமங்களை அல்லது சொற்களைப் பொருள் உணர்ந்து அவற்றில் பதிந்துள்ள உணர்வைக் கண்டு அவை பேசும் தெய்வத்தின் எழிலை ஓர்ந்து சொல்லுதல் மிகுந்த பயனைக் கொடுக்கும். பொருளறியாமல் செய்யப்படும் அர்ச்சனை பயனில்லாது கழியும்.

எளிய வழி என்றாலும் அரிய பயனைக்கொடுக்கும் ஆற்றலுள்ள நாமஜபத்தை நம்பிக்கையோடும் சித்தசுத்தியோடும் ஒழுங்காகவும் முறையாகவும் செய்யும்போது சாதகன் விரைவில் சித்தி பெற்று உய்ய முடியும்.

எல்லா மந்திரங்களும் அல்லது நாமாக்களும் ஏற்றத் தாழ்வற்ற வலிமை பெற்றனவே. இதனைச் சாதகன் நம்பிக்கையோடு நன்கு உணர வேண்டும்.

தான் ஜபிக்கும் மந்திரமே உயர்ந்தது, பிறர் ஜபிக்கும் மந்திரம் தாழ்ந்தது என்ற எண்ணம் நமது சாதனையைத் தாழ்த்திவிடும்.

## குருவென்னும் திரு

அஞ்ஞானம் என்னும் பேரிருட்டிலிருந்து ஞானம் என்ற பேரொளிக்கு இட்டுச் செல்லும் பெருங்கருணை மானிட உருக் கொண்டதே குரு வடிவம்.

குருவின் அமுத ஸ்பர்சம், தரிசனம், பேச்சு எல்லாம் சாதகனை எண்ணுதற்கு அரிய ஏற்ற மிகு நிலைக்கு உயர்த்திவிடுகின்றன.

சாதனையின் உயர்வுக்குக் குருவின் உபதேசம் இன்றியமையாத ஓர் உத்தமத் துணை.

குருவின்வழி பெறப்படும் உபதேசம் அல்லது மந்திரம் நம்பிக்கையோடு கைக்கொண்டு ஜபிக்கும்போது மகத்தான வலிவு கொண்டு விளங்கும்.

குரு மானிட வடிவில் வரும் பரம்பொருளே தவிர வேறல்ல. எனவே ஜபயோக சாதனை குரு வழி நடைபெறுவதே சிறப்பு.

இறைவனது மகத்தான கருணை மட்டுமே குரு என்ற திருவை நமக்கு அருள வல்லது.

## ஜப எண்ணிக்கை

தான் செய்யும் ஜபத்தின் எண்ணிக்கை காண, சாதகன் ஸ்படிகமணி மாலையோ, துளசி ருத்ராக்ஷ

---

எல்லாவற்றையும் தியாகம் செய்வதில்தான் சாந்தி இருக்கிறது. எல்லாவற்றையுமே தியாகம் செய்யத்தான் வேண்டுமானால், உலகத்திலுள்ள ஜீவராசிகளின் நன்மைக்காக அவற்றைத் தியாகம் செய்வதுதான் நல்லது.

—டாக்டர் ராதாகிருஷ்ணன்

ஒருவன் தானாகவே பாவம் செய்கிறான். தானே தனக்குக் கேடு தேடுகிறான். ஒருவன் தானாகவே பாவத்தை விலக்குகிறான். தானே தன்னைப் புனிதமாக்குகிறான். சுத்தமும் அசுத்த மும் அவன் செயலே; எவையும் பிறரைப் புனிதமாக்குவதில்லை.

—தம்மபதம்

மாலை இவற்றில் எதையேனும் ஒன்றையோ பயன்படுத்தலாம். அவற்றில் தவறாது 108 மணிகள் இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும்.

மேரு என்ற உச்சிமணி, தனித்து, அந்த 108 எண்ணிக்கையில் அடங்காமல் இருக்கும்படியும் பார்த்துக்கொள்ள வேண்டும்.

மாலை இல்லாதபோது வலக்கை விரல்களை ஜபத்தின் எண்ணிக்கை காணப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

சுண்டுவிரலுக்கு அடுத்த விரலிலுள்ள மூன்று விரற்கடைகளின் நடுவிலுள்ள விரற்கடையி லிருந்து எண்ணிக்கையைத் துவங்கி ஒன்று இரண்டு எனக் கீழ்நோக்கி வந்து, அடுத்துச் சுண்டுவிரலின் கடைசியிலிருந்து எண்ணிக்கை மூன்று என்று துவங்கி, மேலே போய் நான்கு ஐந்து என்று முடித்து, அடுத்துள்ள விரல்களின் சிகரத்தை மட்டும் எண்ணிக்கொண்டு, பின்னர் ஆள்காட்டி விரலில் மீதியுள்ள விரற்கோட்டுப் பகுதியையும் சேர்த்து எண்ணிப் பத்து என்று ஆக்கிக்கொள்ள வேண்டும்.

ஒரு முறை இந்தச் சுற்று முடிந்ததும் இடக் கையில் ஒரு விரலை விட்டு ஒரு சுற்று அல்லது எண்ணிக்கை ஒரு பத்து ஆகியுள்ளது என நினைவில் கொள்ள வேண்டும்.

இதே போல், இரண்டு முறை இடக் கை விரல்களை நீட்டி மடக்கிப் பின்னர் ஒரு 8ஐ எண்ணிக்கொண்டால் 108 எண்ணிக்கை கிடைத்துவிடும்.

இதனைப் பெரியோர் ஜப எண்ணிக்கைக்குச் சிறந்த வழியாக உபதேசித்தனர்.

## ஜபமுறையும் அறையும்

ஜபம் மனஒருமைக்குச் சிறந்த சாதனம் என்று பகவான் கீதையில் உபதேசிக்கிறார்.

தியானம் ஜபம் இவற்றிற்குத் தூயதும் தனியானதுமான ஓர் அறை மிகவும் அவசியம்.

அங்கு இஷ்டதெய்வத்தின் படத்தைக் கண் பார்வைக்கு எட்டும் உயரத்தில் பொருத்தி, ஓர் இருக்கை அல்லது விரிப்பின் மீது அமர்ந்து, படத்திலுள்ள இஷ்டதெய்வத்தைச் சில நிமிஷம் நன்றாகப் பார்த்துப் பின்பு கண்களை மூடி மனத் திரையில் பதிவான அந்தத் தெய்வத்தை ஜபித்தல் முறை. மிகுந்த ஆர்வத்தோடும் தளர்வற்ற அக்கறையோடும் ஜபம் செய்தல் முக்கியம்.

''ஒரு நாளைக்கு ஒரு மாலை வீதம் துவங்கிக் குறைந்தது ஒரு நாளைக்கு 20 மாலை வரை ஜபிக்கும் அளவுக்குப் பயிற்சியை உயர்த்திக் கொள்ள வேண்டும்'' என்பது சான்றோரின் வாக்கு.



ஜபம் முடிந்ததும் ஜபமாலையைத் தூய்மையான இடத்தில் பாதுகாப்பாக, யார் கைக்கும் சிக்காமல், அழுக்கும் அசுத்தமும் உள்ள இடங்களில் வீழ்ந்து பழுதுபடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

சந்தியாவேளையில் சாத்துவிகமான எண் ணங்கள் மலர்ச்சி கொள்ளும். எனவே காலை மாலைச் சந்திகளில் மேற்கொள்ளும் ஜபம் சிறந்த பலனைக் கொடுக்கும்.

## பஜ கோவிந்தம்

நமது அறிவும் ஆற்றல்களும் செல்வமும் பதவியும் அழகும் அந்தஸ்தும் நம்மைப் பிறவி நரகிலிருந்து காப்பன அல்ல.

காலன் ஒரு நாள் உன் கணக்கு முடிந்த தென்று கதவைத் தட்டும்போது, 'நான், எனது' என்ற அனைத்தையும் விட்டுச் செல்ல வேண்டி வரும். அப்போது துயரில்லாமல், துன்பப் படாமல், கர்மக் கட்டுகளிலிருந்து விடுதலை பெற்ற சுத்தாத்மாவாக ஜீவன் வெளிச்செல்ல வேண்டும்.

உடல் வலிவோடும் அறிவுத் தெளிவோடும் இருக்கும் காலத்திலேயே, மூப்பும் பிணியும் நம்மைத் தொடாத நேரத்திலேயே, காலை மாலை என்ற காலப் பாகுபாடின்றி எப்போதும் ஹரிநாம கீர்த்தனை செய்து வருதல், தவிர்க்க முடியாத, தவிர்க்கக் கூடாத ஒரு கடமை என்பதை நாம் உணர்ந்துகொள்ள வேண்டும். இந்த விஷயத் தில் அலட்சியம் காட்டும் எந்த மனிதனும் பின்பு அசாந்திக்கும் ஆத்மானந்த இழப்புக்கும் ஆட் பட்டே தீருவான்.

எனவேதான் சங்கரர் தமது பஜகோவிந்தத் தில், உலக இயல்பை, மானிடப் பலவீனங்களை எல்லாம் எடுத்துச் சொல்லி, கடைத்தேறும் உபாயமாக, 'பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம் பஜ கோவிந்தம் மூடமதே' என்று கோவிந்த நாம ஜபத்தை வலியுறுத்திப் பாடிச் சென்றார்.

நா மணக்கப் பாடுங்கள் நாராயணன் நாமத்தை!

கலிசெய்யும் நலிவிலிருந்து நம்மைக் காக்கும் அருமருந்தாம் அச்சுதனின் கீர்த்தியை!

'நாமஸங்கீர்த்தனம் யஸ்ய ஸர்வபாபவிநாச னம்' என்ற துவைபாயனரின் அமுத வாக்கை உள்ளத்தில் ஆழப் பதித்து வைத்துச் சாதனையில் இறங்குவோமாக. ❋

---

# செய்திகள்

* கன்னியாகுமரி விவேகானந்தர் பாறை நினைவுச் சின்னம் மற்றும் விவேகானந்த கேந்தி ராவின் தலைவராக இருந்த திரு ஏகநாத் ரானடே 22-8-82-ஆம் நாள் பூதவுடல் நீத்துப் புகழுடம்பு எய்தினர்.

ஏகநாத் ரானடே அவர்களுக்குச் சென்னை நகர மக்கள் சார்பில் அஞ்சலி செலுத்தும் பொதுக் கூட்டம் செப்டம்பர் 7-ஆம் தேதி சேத்துப்பட்டு உலகப் பல்கலைக்கழகச்சேவை நிலையத்தில் மாலை 6 மணிக்கு, சுவாமி தன்மயானந்தர் தலைமையில் நடைபெற்றது. இந்தக் கூட்டத்தில் முன்னாள் முதல்வர் பக்தவத்சலம், ம. பொ. சிவஞானம் ஆகியோரும் மற்றும் பலரும் பங்கேற்றனர்.

அயராத உழைப்பு என்பதற்கு நல்லதொரு விளக்கமாக நம்மிடையே வாழ்ந்த ஏகநாத் ரானடே அவர்களின் ஆன்மா சாந்தியடையப் பிரார்த்திக்கிறோம்.

* சேலம், ஸ்ரீராமகிருஷ்ண ஆசிரமத்தில் ஆகஸ்டு 21, 22 தேதிகளில் மாலை 5-30 மணிக்கு சுவாமி கமலாத்மானந்தரின் ஆன்மிக உரைகள் நடைபெற்றன.

* ஆகஸ்ட் 29-ஆம் நாள் மயிலாப்பூர், ஸ்ரீராமகிருஷ்ண மடம் 'இளைஞர் மாநாடு' நடத்தியது. சுவாமி தபஸ்யானந்தர், சுவாமி ஹர்ஷானந்தர், சுவாமி ஸ்ரீதரானந்தர், துணை வேந்தர் டாக்டர் எம். சாந்தப்பா ஆகியோர் இந்த மாநாட்டை நடத்தி வைத்தனர். ஒரு நாள் முழுவதும் நடைபெற்ற இந்த மாநாட்டில் மாணவர்களின் பிரச்னைகளைப் பற்றியும் எதிர் காலம் பற்றியும் குறித்த பல கருத்துக்கள் தெரிவிக்கப்பட்டன.

பல வேறு கல்லூரிகளைச் சேர்ந்த மாணவ மாணவியர் 300 பேர் இந்த மாநாட்டில் கலந்து கொண்டனர். மாணவ மாணவியரின் வினாக்க ளுக்கு சுவாமி தபஸ்யானந்தரும் சுவாமி ஹர்ஷா னந்தரும் பதில் அளித்தனர். சுவாமி விவேகா னந்தரின் கருத்துக்களின் அடிப்படையில் ஸ்ரீராமகிருஷ்ண மடம் இந்த மாநாட்டை நடத்தியது.

* உதகமண்டலத்தில் உள்ள ஸ்ரீராமகிருஷ்ண மடம் பல ஆண்டுகளாக ஒவ்வொரு மாதமும் நான்காம் ஞாயிற்றுக்கிழமை அன்று அந்தர் யோகம் நடத்தி வருகிறது. ஆகஸ்ட் 29-ஆம் நாள் நிகழ்ந்த அந்தர்யோகத்தில் சுவாமி கமலாத்மானந்தர் கலந்துகொண்டு உரையாற்றி னர்.

* திருப்பூர், ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த பக்தர்கள் செப்டம்பர் 2-ஆம் நாள் ராகவேந்திர சேவா நிலையத்தில் பொதுக் கூட்டத்திற்கு ஏற்பாடு செய்திருந்தனர். 'ஸ்ரீராமகிருஷ்ணரும் இந்துமதமும்' என்ற தலைப்பில் சுவாமி கமலாத் மானந்தர் உரை நிகழ்த்தினர்.

* நாட்டறம்பள்ளி, ஸ்ரீராமகிருஷ்ண மடம் ஆகஸ்ட் 25-ஆம் நாள் ரூ. 4500 மதிப்புள்ள புத்தாடைகளையும் நோட்டுப் புத்தகங்களையும் 271 ஏழை மாணவ மாணவிகளுக்கு வழங்கியது.




# பிரார்த்தனை ஏன்?

நாடோடி

காந்தியடிகள் கதர்ப் பிரசாரத்திற்காக நாடு முழுவதும் சுற்றிக்கொண்டிருந்த சமயம் அது. மோட்டாரில் நாடு முழுவதும் கதர்ப் பிரசாரம் செய்துகொண்டு வந்தவர், ஒரு நாள் ஆந்திரப் பிரதேசத்திலுள்ள சிக்காகோல் என்னும் ஊர் வந்தார். அவருடன் காகா காலேல்கரும் மகாதேவ தேசாயும் சுற்றுப் பிரயாணம் செய்து வந்தார்கள்,

அன்று சிக்காகோலில் நூற்புப் போட்டி ஒன்று நடந்தது. காகா காலேல்கரும் மகாதேவ தேசாயும் மிகவும் களைத்திருந்ததனுல் நூற்புப் போட்டியைப் பார்க்கச் செல்லாமல் தூங்கச் சென்றுவிட்டார்கள்.

காந்திஜியும் மிகவும் களைத்துத்தான் இருந்தார். இருந்தாலும், போட்டியைப் பார்ப்பது தம் கடமை என்று எண்ணி அதைப் பார்க்கச் சென்ருர்.

அடுத்த நாள் விடியற்காலை நான்கு மணிக்குப் பிரார்த்தனைக்காக, காகா காலேல்கரும் மகாதேவ தேசாயும் விழித்து எழுந்தார்கள். எழுந்தால் காந்திஜி ஏதோ முகவாட்டத்துடன் உட்கார்ந்து இருந்ததைப் பார்த்தார்கள்.

காந்திஜி அவர்களைப் பார்த்து, ''இரவு தூங்குமுன்பு நீங்கள் இருவரும் பிரார்த்தனை செய்தீர்களா?'' என்று கேட்டார். விடியற்காலை நான்கு மணிக்குப் பிரார்த்தனை செய்வது போல, இரவு தூங்கப் போகுமுன் பிரார்த்தனை செய்வது என்று அவர்கள் வழக்கம் வைத்திருந்தார்கள்.

காகா காலேல்கர் சொன்னுர்—''நான் மிகவும் அசதியாக இருந்ததனுல் பிரார்த்தனை ஞாபகமே எனக்கு இல்லை. நான் எப்பொழுது தூங்கச் சென்றேன் என்பதுகூட ஞாபகம் இல்லை.''

மகாதேவ தேசாய் சொன்னுர்—''நானும் மிகவும் அசதியாகத்தான் இருந்தேன். இருந்தும் பிரார்த்தனை ஞாபகம் வந்ததனுல் படுக்கையில் உட்கார்ந்தபடியே பிரார்த்தனை செய்தேன்.''

காந்திஜி சொன்னுர்—''நான் நூற்புப் போட்டியை ஒரு மணி நேரத்திற்கு மேலாகக் கவனித்துக்கொண்டிருந்தேன். பிறகு மிகவும் அசதியாக இருந்ததனுல் படுக்கத் திரும்பினேன். அசதி காரணமாக நான் பிரார்த்தனை விஷயத்தையே மறந்து தூங்கிவிட்டேன். இரவு இரண்டரை மணி இருக்கும்; திடீரென்று விழித்துக் கொண்டேன். பிரார்த்தனை செய்யாமலே தூங்கிவிட்டேனே என்ற எண்ணம் அப்பொழுதுதான் எனக்குத் தோன்றிற்று. அதைப்பற்றித்தான் நான் அப்பொழுது முதற்கொண்டு கவலைப்பட்டுக்கொண்டே இருக்கிறேன். தூக்கம் எத்தனை

அவசியமோ, அத்தனை அவசியம் பிரார்த்தனையுமாச்சே; அதை எப்படி மறந்தேன்?'' என்று சொன்னார்.

பிறகு விடியற்காலைப் பிரார்த்தனை முடிந்ததும் காந்திஜி, ''மாலைப் பிரார்த்தனைக்கென்று ஒரு குறிப்பிட்ட காலம் இல்லாததனால் அது மறந்துபோய் விட்டது. இனி என்ன காரியம் இருந்தாலும் சரி, எங்கு இருந்தாலும் சரி, மாலை ஏழு மணிக்கு மாலைப் பிரார்த்தனை கட்டாயம் செய்ய வேண்டும் என்று வைத்துக் கொள்ள வேண்டும். உடலுக்கு உணவு எத்தனை அவசியமோ, அத்தனை அவசியம் பிரார்த்தனை நம் ஆத்மாவிற்கு. ஆகவே இனி ஒவ்வொரு நாளும் மாலை ஏழு மணிக்குப் பிரார்த்தனை நடக்கும்'' என்று சொன்னார்.

அதற்குப் பிறகு, காந்திஜி எந்தக் காரியத்தில் ஈடுபட்டு இருந்தாலும் சரி, எந்தப் பெரிய மனிதரோடு பேசிக்கொண்டு இருந்தாலும் சரி, மாலை ஏழு மணியானால் எல்லாக் காரியங்களையும் தூரத் தள்ளிவிட்டுப் பிரார்த்தனையைத்தான் கவனிப்பார்.

## சொர்க்கம் மலிவு அல்ல

'அரும்பு'

ஒரு நாள் காலை பணக்காரன் ஒருவன் சொர்க்கத்தின் கதவைத் தட்டினான். சித்திரகுப்தன் வந்தான். சித்திரகுப்தன் பாவ புண்ணியக் கணக்குப் பார்த்து ஆட்களைச் சொர்க்கத்துக்கும் நரகத்துக்கும் அனுப்புபவன். சித்திரகுப்தன், ''நீ யார்?'' என்று பணக்காரனைக் கேட்டான்.

''என்னைத் தெரியாதா? நான் இறந்த செய்தி இன்னும் இங்கே வரவில்லையா? நான் பெரும் பணக்காரன்'' என்றான்.

''உனக்கு என்ன வேண்டும்?''

''சொர்க்கத்துக்குள் போக வேண்டும்.''

''நீ இதுவரையில் பிரதிபலனை எதிர்பார்க்காமல் செய்த தருமங்கள் என்ன என்ன என்று கூறு. மறவாதே, பிரதிபலனை எதிர்பாராத தருமங்கள்........''

''ஓர் ஏழைக்குப் பத்துப் பைசா போட்டேன்.''

''அப்புறம்?''

''ஒரு சிறுமிக்கு ஐந்து பைசா தந்தேன்.''

சித்திரகுப்தன், ''இவை சரிதானா?'' என்று அருகில் இருந்த உதவியாளனைக் கேட்டான். அவன் ஃபைலைப் பார்த்துச் சரி என்றான்.

''அவ்வளவுதானா?''—சித்திரகுப்தன்.

''அவ்வளவுதான்''—பணக்காரன்.

''மீதித் தருமங்கள் அவ்வளவும்...''

''பிரதிபலனை எதிர்பார்த்தவை.''

சித்திரகுப்தன் அருகில் இருந்த உதவியாளனிடம், ''இவனை என்ன செய்யலாம்?'' என்று கேட்டான்.

உதவியாளன் சொன்னான்—''இவன் கையில் பதினைந்து பைசாவைக் கொடுத்து நரகத்துக்கு அனுப்பிவிடுங்கள். சொர்க்கம் அவ்வளவு மலிவானதல்ல.''

# அன்பாய் விரும்பு

கி. வா. ஜகந்நாதன்

காரைக்கால் அம்மையார் தம் நெஞ்சைப் பார்த்துப் பேசுகிறார். அந்த நெஞ்சு நம்முடைய போன்றதன்று. 'எந்தையார்க்கு ஆட்செய்யப் பெற்ற இதுகொலோ, சிந்தையார்க்கு உள்ள செருக்கு.' அந்த நெஞ்சு பெருமிதத்தோடு இருப்பதை முன்பு (79) சொல்லியிருக்கிறார். இறைவனை உணர்ந்த நெஞ்சு அது. இறைவனுடைய சேவடிக்கே ஆளாய் வேறு ஒன்றையும் விரும்பாத நெஞ்சு அது.

நம்முடைய மனத்துக்கு நாம் அடிமையாக இருக்கிறோம். அதனால் அது நம்மைக் காடு மேடெல்லாம் இழுத்துக்கொண்டு திரிகிறது. பேய்க்கு அடிமைப்பட்டால் அது நாம் விரும்பாத செயல்களையெல்லாம் செய்யச் சொல்லும். அதை நாம் அடிமைப்படுத்திவிட்டால் நாம் விரும்பிய காரியங்களையெல்லாம் அது செய்யும். இந்த மனமும் ஒரு பேய்தான். அதை அடக்கி நம் வசப்படுத்திவிட்டால் அது நம் விருப்பம்போல நடக்கும். இறைவனையே நினைக்கும்படி நாம் ஏவினால் அப்படியே செய்யும். அது வன்னெஞ் சாகவோ புன்னெஞ்சாகவோ இராமல் நன்னெஞ் சாகவே மாறிவிடும்.

இத்தகைய நன்னெஞ்சைப் படைத்தவர் அம்மையார். அதைத் தட்டிக் கொடுத்து அதைப் பின்னும் நன்றாக இறைவனிடம் ஈடுபடும்படி ஏவுகிறார் அம்மையார். அதை, 'நன்னெஞ்சே!'' என்று விளித்துச் சொல்லப் புகுகிறார்.

**நன்னெஞ்சே!**

இறைவனிடம் இடையறாத அன்பு செய்ய வேண்டும் என்பதைச் சொல்ல வருகிறார். யாவர்க்கும் மேலான அவனை விரும்பி அன்பு செய்தால் அதனினும் சிறந்த செயல் வேறு இல்லை. அவனைப்பற்றிச் சொல்கிறார்.

மனிதர்களைவிட உயர்ந்தவர்கள் தேவர்கள். தம்மினும் உயர்ந்தவர்களைப் பற்றிக்கொண்டு வாழ்வதுதான் அறிவாளிகளுக்கு அழகு. இறைவனே எல்லாத் தேவர்களுக்கும் தலைவன். அவர்களுக்கு வேண்டியவற்றையெல்லாம் தரும் உபகாரி. 'இதை நீ முதலில் தெரிந்துகொள்' என்று தொடங்குகிறார்.

**அவன் கண்டாய்**
**வானோர் பிரான் ஆவான் என்றும்.**

சிலர் சில காலம் தலைவர்களாக இருப்பார்கள். பிறகு அந்தத் தலைமைப் பதவி போய்விடும். எப்போதுமே தலைவராக இருக்கும் நிலை இந்திராதியர்களுக்கு இல்லை. ஆனால் சிவ பெருமானே என்றும் தலைவனாக இருப்பவன். மற்றவர்கள் எல்லாம் தம் தம் தொழிலை ஆற்றும் தலைவர்களாக இருந்து, தமக்கு வரையறுக்கப் பட்ட காலம் ஆனவுடன் அந்தத் தலைமைப் பதவியிலிருந்து இறங்கி விடுவார்கள். இறைவனே என்றும் பிரானாக இருப்பவன்.



அவன் எப்படி இருக்கிறான்?

அழகிய பவள வண்ணத் திருமேனி கொண்டவன் அவன்.

''பவளம் போல் மேனியிற் பால்வெண்ணீறும்'' என்று அப்பர் பாடுவார். ''குழகன்றன் அம்பவள மேனி'' (39) என்று முன்னும் அம்மையார் சொல்லியிருக்கிறார். இப்போதும்,

**அவன் கண்டாய் அம்பவள வண்ணன்**

என்கிறார்.

இறைவனுடைய நீல கண்டத்தைப் பற்றி அடிக்கடி சொல்வது அம்மையாருக்கு இயல்பு.

முதல் பாட்டிலேயே, 'மைஞ்ஞான்ற கண்டத்து வானோர் பெருமானே' என்று சொன்னவர். அந்த வானோர்பிரானுடைய கண்டத்தை இப்பொழுதும் நினைக்கிறார். அது கருமைநிறம் பொருந்தி விளங்குகிறது. செம்பவளத் திருமேனியில் அந்த வண்ணம் எடுப்பாகத் தெரிகிறது.

அவன் கண்டாய்
மைத்து அமர்ந்த கண்டத்தான்.

அவன் கண்டம் ஆலகால நஞ்சை உண்டமையால் மை போலக் கறுத்துத் தங்கியிருக்கிறது. அதைத் தன்னிடத்தில் இருப்பதை விரும்பி ஏற்றுக்கொண்டது அந்தக் கண்டம். தேவர்களையும் பிறரையும் நடுநடுங்கச் செய்த அதை இறைவன் உண்டு கண்டத்திலே தேக்கி நலம் செய்தான். பிறருடைய துன்பத்தைப் போக்குவதில் இன்பம் காணுகிறவன் எம்பெருமானாதலின் அந்த நஞ்சைத் தன் திருக்கழுத்திலே வைத்திருக்கிறான். அந்தக் கண்டம் கருமை பெற்று விளங்குகிறது. அதை அவன் விருப்புடன் ஏற்றது மட்டும் அன்று, பிறரைச் சார்ந்திருந்தால் அவரையும் அழித்துத் தானும் அழிந்துபோயிருக்கும் அந்த நஞ்சு. இப்போது அது இறைவனுடைய கண்டத்தில் கரிய நிறத்தோடு பொருந்தித் தங்கியிருக்கிறது. அதற்கும் சிரஞ்சீவித்தன்மை கிடைத்துவிட்டது.

"கறைமிடறு அணியலும் அணிந்தன்று
அக்கறை
மறைநுவல் அந்தணர் ஏத்தவும் படுமே"

என்று அந்த நஞ்சுக்குக் கிடைத்த பெருமையைப் புறநானூறு சொல்கிறது.

'அத்தகைய பரமோபகாரிபால் நீ அன்பு செய்த அவனையே விரும்பு. நீ நன்னெஞ்சமாகையால் நான் சொல்வதைப் புரிந்துகொள்வாய். அவனிடத்தில் மெய்யான அன்புடன் இரு. அவனையே விரும்பு' என்கிறார்.

"உள்ளம், பொய்தான் தவிர்ந்து உன்னைப்
போற்றி சயசய போற்றி என்னும்,
கைதான் நெகிழவிடேன்"

என்பார் மாணிக்கவாசகர்.

அவ்வாறு உண்மையாக, உள்ளார்ந்த அன்புடன் பொருந்தி அவனையே விரும்ப வேண்டும். வானோருக்கே வேண்டியவற்றை வழங்கும் அவன் நமக்கு வேண்டியவற்றையும் தரும் அருளாளன். எவனை விரும்பினால் எல்லாம் கிடைக்குமோ அவனையே விரும்ப வேண்டும். ஒவ்வொரு பொருளை ஒவ்வொரு சமயம் நமக்கு வழங்கும் கொடையாளர்களை நாடிச் சென்றால் அவர்கள் வழங்கும் பொருள் பலநாள் நில்லாது. நமக்கு வேண்டியவற்றைப் பெறுவதற்கு வெவ்வேறு வள்ளல்களிடம் போய் நிற்க வேண்டும். அவ்வாறு இன்றி எல்லாவற்றையும் ஒருங்கே தரும் ஒரு பெருவள்ளலிடம் போய் அன்பு செய்தால் அவரால் எல்லாவற்றையும் பெறலாம். வேறு ஒருவரிடம் சென்று கையேந்தி நிற்க வேண்டிய அவசியம் இல்லாமற் போய்விடும்.

ஆகவே வானோர்பிரானாகிய அவனையே மெய்யாக விரும்பி அன்பு செய்ய வேண்டும். இதைச் சொல்கிறார் அம்மையார்.

மற்று அவன்பால் நன்னெஞ்சே
மெய்த்து அமர்ந்து அன்பாய் நீ விரும்பு.

---

# செய்திகள்

* மதுரை, ஸ்ரீராமகிருஷ்ண சமாஜத்தின் ஸ்தாபகரும் காரியதரிசியுமான ஜி. ஏ. இராமமூர்த்தி அவர்கள் ஆகஸ்ட் 21- ஆம் நாள் பூதவுடல் நீத்து ஸ்ரீ குருதேவர் திருவடியில் ஐக்கியமானார்.

பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் தீவிர பக்தரான ஜி. ஏ. இராமமூர்த்தி அவர்கள், கடந்த 35 ஆண்டுகளுக்கும் மேலாக ஸ்ரீராமகிருஷ்ணரின் தொண்டுக்காகவே தம்மை அர்ப்பணித்து வாழ்ந்து வந்தார். அவரது ஆன்மா சாந்தியடையப் பிரார்த்திக்கிறோம்.

* சமீபத்தில் வடஇந்தியாவில் வெள்ளம் காரணமாகப் பாதிக்கப்பட்ட பல பகுதிகளில் ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் வெள்ள நிவாரண பணிகளை மேற்கொண்டு நடத்திவருகிறது.

உண்மையான அன்பை உணர்ந்துகொண்டு அத்தகைய அன்பர்களுக்கு எல்லாவற்றையும் வரையறையின்றி வழங்கும் வண்மையை உடையவன் அவன்.

"நல்லோரை நன்மை அறிவாய் நீயே"

என்று அப்பர் பாடுவார். யார் உண்மையான அன்புடையவர், யார் போலிகள் என்பதை நன்முக உணர்பவன் அவன்.

"பொக்க மிக்கவர் பூவும் நீரும் கண்டு
நக்கு நிற்கும் அவர்தமை நாணியே"

என்று நாவுக்கரசர் சொல்வது போலப் போலிகளை இனம் கண்டுகொள்பவன் அவன். ஆகவே, அவனிடம் உண்மையாக ஒழுகி அன்பு செய்து அவனையே விரும்ப வேண்டும்.

அவன் கண்டாய் வானோர்
பிரான் ஆவான் என்றும்;
அவன் கண்டாய் அம்பவள
வண்ணன்;—அவன் கண்டாய்
மைத்து அமர்ந்த கண்டத்தான்;
மற்று அவன்பால் நன்னெஞ்சே,
மெய்த்து அமர்ந்துஅன் பாய்நீ விரும்பு.

என்னுடைய நல்ல நெஞ்சமே, சிவபெருமானே எல்லாக் காலத்தும் வானோர்களுக்குத் தலைவனாய் அவர்களுக்கு வேண்டியவற்றை வழங்கும் பரமோபகாரியாக இருப்பவன்; இதனை நீ தெரிந்துகொள். அவனே அழகிய பவள வண்ணத் திருமேனியை உடையவன்; இதையும் அறிந்துகொள். அவனே மைநிறம் பெற்றுப் பொருந்திய திருக்கழுத்தை உடையவன்; இதனையும் நீ உணர்ந்துகொள். அவனிடம் உண்மையாகத் தங்கி அன்பாக இருந்து அவனே விரும்புவாயாக.

[அவன் : உலகறிசுட்டு, கண்டாய் என்று அடுத்தடுத்துச் சொன்னார், மனம் வேறு பொருளில் பற்று அறுதற்பொருட்டு. பிரான்-தலைவன், உபகாரி. ஆவான் என்பது புதிதாக ஆகிறவன் என்ற பொருள்தராமல் என்றும் உள்ள நிலையைச் சுட்டியது; அதை வற்புறுத்தவே என்றும் என்ற சொல்லைப் பெய்தார். என்றும் பிரானுவான் என்க. அம்பவளம்—காண்பதற்கு அழகாக உள்ள பவளம். மைத்து-மை நிறம் பெற்று; இருண்டு. அமர்ந்த-தங்கிய. என்றும் உள்ளவனைச் சேர்ந்தமையால் அந்தக் கரிய நிறம் அங்கே தங்கியது. 'கறை நிறுத்திய கண்டன்' என்று திருவிளையாடற்புராணம் கூறும். மற்று: அசை. மெய்த்து-மெய்த்தன்மையைக் கொண்டு; மெய்யாக என்றபடி. பொய் என்பதனடியாகப் பொய்த்து என்பது வந்தது போல மெய் என்பதனடியாக மெய்த்து என்ற எச்சம் வந்தது. அமர்ந்து-பொருந்தி; அலையாமல் பொருந்தி என்றபடி. அன்பாய்-அன்பே வடிவமாய்; குணம் வேறு, குணி வேறு என்ற பேதம் தோன்றுமல் அன்பு வடிவமே ஆகி என்றபடி. விரும்பு-விருப்பம் கொள். பிறவற்றை விரும்பினுல் அந்த விருப்பமே பிறவிக்கு ஏதுவாகிவிடும். அவனை விரும்பினுல் பிறவியைப் போக்கிவிடலாம்.]

இறைவனிடம் மெய்யன்பு பூண்டு வாழ வேண்டும் என்பது கருத்து.

அற்புதத் திருவந்தாதியில் வரும் 93-ஆவது பாட்டு இது.

○

---

மனிதப் பிறவி பிரயோஜனம் உள்ளதாக ஆக வேண்டுமானுல் நமக்கு ஜீவிப்பதற்கு மேல் இம்மியளவும் விரும்பக்கூடாது. இதுவே அபரிக்ரஹம்.
—ஒரு பெரியவர்

பரதன் கூறியது: ஸ்ரீராமனைக் காட்டுக்குப் போகும்படி அனுமதி கொடுத்தவன், குடிக்கிற தண்ணீரைக் கெடுப்பவனுடைய பாவத்தில் போகக்கடவன்.
—அயோத்தியா காண்டம்

வேதநூல்களிலுள்ள சொல்திரள்கள் பெரிய காடு போன்றவை. மனம் அதில் புகுந்தால், முடிவின்றி அலைந்துகொண்டிருக்கும். ஆகவே ஒருவன் ஆத்மஞானியாகிய ஆசாரியரிடம் உண்மையை உணர்ந்து அனுபவிக்க வேண்டும்.
—விவேக சூடாமணி

வியாச முனிவர் சுருக்கமாகக் கூறியது: பணம் பாக்கியத்தினுல் உனக்கு ஆவது என்ன? உறவினர்களால் ஆவது என்ன? மனைவியே இறந்துபோகும்போது மனைவியும் மகனும் உன்னை எப்படித் தாங்கப்போகிறுர்கள்? இதயகுகையில் மறைந்து உறையும் ஆத்மாவை நாடு. உன் தந்தையும், உன் தந்தையின் தந்தையும் எங்கே சென்றிருக்கின்றனர்?
—மகாபாரதம், சாந்திபர்வம் 323-72



# கீதைச் சிந்தனைகள்

சுவமி ராகவேசானந்தர்

கீதை நான்காம் அத்தியாயமான ஞானகர்ம சந்நியாச யோகத்தில் பகவான், 'மனிதர்கள் எந்த எந்த வழிகளில் என்னை வழிபடுகிறார்களோ, அவர்கள் விரும்பும் அந்த அந்த வழிகளில், அந்த அந்த வடிவில் சென்று அவர்களுக்குக் காட்சி தருகிறேன்' என்று கூறியிருக்கிறார்.

எனவே பகவானுடைய வடிவமும், அவர் பக்தர்களுக்கு அருள்புரியும் வழிகளும், பக்தர் களின் வேண்டுதலுக்கும் வழிபாட்டுக்கும் ஏற்ப எண்ணற்றவையாகும். ஆனால் அவர் ஒவ்வொரு பக்தனுக்கும் அவன் தன் ஆன்மிக வளர்ச்சியில் வெற்றிபெற எப்போதும் உதவிசெய்யத் துடித்துக் கொண்டே இருக்கிறார்.

எனவே எவன் தன் மனம் முழுவதையும் கடவுளின் திருவடிகளில் அர்ப்பித்துவிடுகிறானோ அவன் மிகவும் பாக்கியவான். இத்தகைய நிலை ஒரு பக்தனுக்கு அவன் நெடுங்காலம் கடுமையான தவம் செய்தபிறகே ஏற்படும். இதை நன்றாக அறிந்தவர் கிருஷ்ணர். எல்லோரும் இத்தகைய தவத்தைச் செய்ய முடியாது.

எனவே கிருஷ்ணர் இதற்கு மாற்றுவிதியாக மற்றொன்றைக் கூறுகிறார். கிருஷ்ணர் சொல்கிறார்—'உன்னால் உன் மனதை நிலையாக என்னிடம் வைப்பது முடியவில்லை என்றால், நீ அப்பியாச யோகத்தைக் கடைப்பிடி' என்று கூறுகிறார்.

யாருடைய மனம் இயல்பாகவே எப்போதும் கடவுளை நாடிச் செல்கிறதோ அவர்கள் பாக்கியவான்கள். யாருடைய மனம் அப்படிச் செல்லவில்லையோ அதற்காக அவர்கள் வருத்தப்பட வேண்டியதில்லை. மனதின் இயல்பு, இவ்வாறு ஓரிடத்தில் நிலையாக இல்லாமல், பலவேறாக அலைந்து திரிவதுதான்.

நம்மிடத்தில் எப்போதும் கடவுளையே தியானிக்க வேண்டும் என்ற ஆசை இருந்தாலும், முற்பிறவியில் நாம் செய்த காரியங்களின் பலனாக மனம் அவ்வாறு கடவுளை நினைக்க முடியாமல், கடவுளுக்கும் உலக ஆசைகளுக்கும் நடுவே அலைந்துகொண்டிருக்கும். ஆனால் கடவுளைச் சிந்திக்க நினைக்கும் நம் விருப்பம் ஆழமானதாகவும் வலிமையானதாகவும் அமைந்துகொண்டே போகுமானால், நம் முற்பிறவி வாசனைகள் அனைத்தும் சிறிது சிறிதாக அழிந்து போகும். மனம் கடவுளின் திருவடிகளில் எப்போதும் தங்குகிற ஆற்றலைப் பெறும்.

முக்தி பெறுவதற்கும், ஆசைச் சுழலில் அகப்பட்டுத் துடிதுடிப்பதற்கும், அனைத்துக்கும் மனமேதான் காரணம்.

நாம் நம் மனதின் கருணையைப் பெறுவோமானால் கடவுளின் கருணையை அடைவது எளிதானதாகும். இதை அடைவதற்காக நாம் அப்பியாச யோகத்தைக் கடைப்பிடிக்க வேண்டும்.

அப்பியாச யோகம் என்பது ஒவ்வொரு விநாடியும், சிறிது சிறிதாகத் தொடர்ந்து, ஒரு விநாடிகூடத் தடையில்லாமல் சாதனையைப் பழகுகிற ஒரு பயிற்சி முறையாகும். நாம் எப்போதும் கடவுளைப்பற்றியே சிந்தித்துக்கொண்டிருக்க வேண்டும். அவருடைய பெருமைகளை, அடியவர்க்கு அவர் செய்த அருள் திறன்களை, அவருடைய திருவிளையாடல்களை எப்போதும் நினைத்தபடியே இருக்க வேண்டும். அப்படித் தொடர்ந்து சிந்திக்கும்போது மனம் சோர்வு அடையுமானால் மனதிற்குச் சிறிது ஓய்வு தர வேண்டும். களைப்புத் தீர்ந்து மனம் சுறுசுறுப்பும் புத்துணர்ச்சியும் பெற்றதும், மறுபடியும் கடவுள் சிந்தனையைத் தொடர வேண்டும்.

இதுபோல் ஒவ்வொரு விநாடியும், ஒவ்வொரு மணியும், ஒவ்வொரு நாளும் தொடர்ந்து செய்ய வேண்டும்; செய்துகொண்டே இருக்க வேண்டும். இப்படித் தொடர்ந்து செய்து வரும் பயிற்சியின் மூலம் நாம் நம் மனதைச் சிறிது காலத்திற்குள், நம் மனம் எப்போதும் கடவுளின் சிந்தனையில், தியானத்தில் மூழ்கிக் கிடக்கும்படி செய்துவிடலாம்.

பசு கன்று போடுகிறது. சிறிது நேரத்திற்குள் கன்று எழுந்து நிற்க முயலுகிறது; முடியாமல் கீழே விழுகிறது. கன்று மறுபடியும் எழுகிறது; கீழே விழுகிறது. இப்படி அடிக்கடி விழுந்தபோதும் விடாமல் நிற்பதற்கு அது முயன்றுகொண்டே இருக்கிறது. இறுதியில் எழுந்து நிற்பது மட்டுமல்லாமல் ஓடவும் துவங்குகிறது. அது போல்தான் நம் நிலையும்.

ஆரம்பநிலையில் தாயின் வயிற்றிலிருந்து கீழே விழுந்த கன்றின் நிலையில் நாம் இருக்கிறோம். எழுந்துகொள்ள ஆரம்பிப்போம். ஒரு முறை இரு முறை மட்டும் அல்ல, பல முறை, பல நூறு முறை இந்த முயற்சியில் நாம் விழுந்துவிடலாம். ஆனால் இறுதியில் அந்தக் கன்றைப் போன்று நிற்கவும் ஓடவும் நமக்கு இயல்பாகத் திறமையும் வலிமையும் வந்துவிடும். அப்போது எல்லோரும் ஆச்சரியப் படும்படி நாம் ஓடிக்கொண்டே இருப்போம்.

இப்படிச் சிறுகச் சிறுக இடைவிடாமல் நம் ஆற்றலை முழுமை அடையும்வரை பெருக்கிக் கொள்வதற்குத்தான் அப்பியாச யோகம் என்று பெயர்.

அப்பியாச யோகத்தால் அடைய முடியாதது எதுவும் இல்லை. ஆனால் நமக்குப் பொறுமையும் விடாமுயற்சியும் விடாப்பிடியும் வேண்டும். இவை இருந்தால் எளிதாக வெற்றி பெறலாம்.

அப்பியாச யோகத்தைக்கூடப் பின்பற்றுவதற்கான மனவலிமையும் முதிர்ச்சியும் பெருதவர்களாய்ப் பலர் இருக்கலாம். கிருஷ்ணர் அவர்களை யெல்லாம் ஒரு தனிக் குழுவினராகப் பிரித்துக் கீழ்க்காணும் விதிமுறைகளை அவர்களின் முன்னேற்றத்திற்காகக் கூறுகிறார். கிருஷ்ணர் கூறுகிறார்—'அப்பியாச யோகம் மூலம் சிறிது சிறிதாக இடைவிடாமல் என்னைச் சிந்தித்து நிலையாக என்னிடம் தங்கள் மனதை வைக்க முடியாதவர்கள் இடைவிடாமல் எனக்காக ஏதாவது ஒரு காரியத்தைத் தொடர்ந்து செய்துகொண்டே இருக்க வேண்டும். இவ்வாறு செய்துகொண்டே வந்தால் அவர்கள் மனம் படிப்படியாகத் தூய்மையடைந்து, வேறு எந்த நினைவுகளுக்கும் இடம் தராமல் என்னை வந்து அடையும்.' பகவான் இங்கே இப்படிக் கூறும் இந்த வழி பக்தியோகமும் கர்மயோகமும் இணைந்த ஒரு வழியாகும்.

நாம் நம்முடைய சுகத்திற்கும் லாபத்திற்குமென்று காரியங்களைச் செய்தோமானால் அவை வெறும் கர்மங்களாகும். அந்தக் காரியங்களைக் கடவுளுக்கென்று செய்து, அவற்றின் பலனைக் கடவுளுக்கே அர்ப்பித்துவிடுவோமேயானால் அது கர்ம யோகமாகும். அதாவது பந்தப்படுத்தும் கர்மங்களே நம்மைப் பகவானோடு இணைக்கும் காரியங்களாக ஆகிவிடுகின்றன. எல்லாமே மனதைத்தான் பொறுத்திருக்கிறது. நம் மனம், இந்த உலகம் முழுவதும், உலகத்திலுள்ள ஒவ்வொரு பொருளும் கடவுளே, நாம் இந்த உலகத்தில் பிறந்ததற்குக் காரணம் அவரை அந்த ஒவ்வொரு பொருளிலும் கண்டு, நம்மால் முடிந்த எல்லா விதமான தொண்டுகளையும் அவருக்குச் செய்து, அவருடைய கருணையையும் கடாட்சத்தையும் பெறுவதற்கே என்ற உண்மையைத் தெளிவாகப் புரிந்துகொள்வோமேயானால் எல்லாம் எளிதாகிவிடும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது போல், எந்த நேரத்திலும், எத்தகைய வேலைகளைச் செய்து கொண்டிருக்கும் நிலையிலும், தொடர்ந்து கடவுளிடம், ''பகவானே, நீ என்மூலம் இந்தச் சிறிய வேலைகளைச் செய்துகொள்ள விரும்புகிறாய். எனவே நான் உன் வேலையைச் செய்யும் ஓர் யந்திரமாகவே இருப்பேனாக. அதன் பலன்களில் ஆசைப்படாதவனாகவும், 'நான்தான் இந்தக் காரியத்தைச் செய்தேன்' என்ற நினைப்பு என் மனதில் தோன்றாமலும் செய்வாயாக'' என்று ஓயாமல் பிரார்த்தித்துக் கொண்டே இருக்க வேண்டும்.

ஸ்ரீராமகிருஷ்ணர் மேலும் கூறுவது போல், ஒரு கையால் உலகக் காரியங்களை எல்லாம் பார்த்துக்கொண்டு, மற்றொரு கையால் கடவுளின் திருவடிகளைப் பற்றிப் பிடித்துக்கொள்ள

வேண்டும். நாளடைவில் கடமைகளிலிருந்து பகவான் நம் மற்ரெரு கைக்கும் விடுதலை தருவார். அப்போது இரண்டு கைகளாலும் கடவுளின் திருவடிகளை உறுதியாகப் பிடித்துக்கொள்ளலாம்.

ஆனால் இதைக்கூடச் செய்ய முடியாமல், மனநிலையில் இன்னும் கீழான நிலையிலும் பக்தர்கள் இருக்கிறார்கள். ஆயிரக் கணக்கான வேலைகளை அவர்கள் தங்களுக்காகவும், தங்களைச் சார்ந்தவர்களுக்காகவும் செய்வார்கள். ஆனால் கடவுளுக்கென்று காரியங்களைச் செய்வதற்கு மட்டும் அவர்களால் முடியாது. அவர்களால் தாங்கள் கடவுளோடு இணைந்தவர்கள் என்று உணருவதற்கு முடியவே முடியாது. அவர்கள் தங்கள் சுயநலம் ஒன்றுக்காகவே எல்லா வேலைகளையும் செய்வார்கள். ஆனால் அவர்களுக்கும் கடவுளிடம் நம்பிக்கை இருக்குமானால், அவர்களும் பக்தர்களே. அத்தகைய வர்களை நான்காம் தரப் பக்தர்கள் என்று பாகுபாடு செய்து பகவான் அவர்கள் உய்வதற்கான வழியையும் கீழ்வருமாறு கூறுகிறார்:—

''யாரெல்லாம் பகவானாகிய எனக்கென்று ஒவ்வொரு காரியத்தையும் செய்ய முடிய வில்லையோ, அவர்கள் என்னைச் சரணடையட்டும். அவர்கள் செய்யும் பாவம் புண்ணியமான காரியங்கள் அனைத்தின் பலனையும் எனக்கே அர்ப்பணம் செய்யட்டும்'' என்று அவர் கூறுகிறார்.

ஒவ்வொருவனும் தன் வாழ்வின் ஒவ்வொரு விநாடியும் ஆன்மிகமயமாக, தெய்வமயமாக இருக்க வேண்டும் என்பது நம் சமயத்தின் மரபாகும். கீதையின் முதற் பகுதியில் பகவானும் இதை, 'எந்த எந்தக் காரியங்களைச் செய்ய நீ விரும்புகிறாயோ அவற்றை எல்லாம் நீ செய். எந்த எந்த வழிகளில் வாழ விரும்புகிறாயோ, அந்த வழிகளில் வாழ். ஆனால் அவற்றின் பலன் அனைத்தையும் எனக்கு அர்ப்பணம் செய்துவிடு' என்று கூறுகிறார்.

நாம் ஒவ்வொரு பிறவியிலும் செய்கிற நல்ல, தீய செயல்கள் நம்மை ஒவ்வொரு முறையும் அதன் பலன்களை அனுபவிக்கப் பிறக்க வைக்கின்றன. ஆனால் நாம் செய்யும் எல்லாக் காரியங்களின் பலனும் பகவானுக்கு அர்ப்பணம் செய்யப்பட்டுவிடுமேயானால், அந்த வினைகளின் பலன்கள் நம்மை வந்து சேரா. அவை அத்தனையும், எரிக்கப்பட்டுவிட்ட விதைகள் மீண்டும் முளைக்காதது போல் தமது விளைவுகளால் நம்மைக் கட்டுப்படுத்தி, மேலும் மேலும் நம்மைப் பிறவிகள் எடுக்க வைக்க மாட்டா. எனவே மனிதர்கள் இந்த வழியில் தங்களைக் கட்டியுள்ள பந்தம் பாசம் துன்பம் துயரம் வேதனைகளை எல்லாம் கட்டறுத்துப் பகவானின் திருவடிகளில் நிலையாகத் தங்கிவிட வேண்டும்.

நமக்கு லாபம் வேண்டும், பலன் வேண்டும் என்னும் சுயநலம் மட்டும் அகற்றப்பட்டு விடுமேயானால், ஒவ்வொரு வேலையையும் கடவுளுக்காகவே செய்கிறோம் என்னும் உணர்வு மனிதர் களுக்குத் தோன்றிவிடுமேயானால், மனிதர்கள் மகத்தான காரியங்களைச் செய்வார்கள். அவர்கள் செய்யும் காரியங்கள் அனைத்தும் யோகமாகிவிடும். அவர்கள் யோகிகளாகிவிடுவார்கள். அத்தகைய யோகிகளைத்தான் சாஸ்திரங்கள், 'ஜீவன்முக்தர்கள்' அதாவது இந்த மனித உடம்பில் வாழ்ந்து கொண்டிருக்கும்போதே முக்தி அடைந்தவர்கள் என்று கூறுகின்றன. அத்தகையவர்களின் உடம்பு நீங்கியதும் அவர்கள் நேராகப் பகவானைச் சென்றடைந்து, அவரோடு நிலையாகத் தங்கிவிடுகிறார்கள். இதுவே மனித வாழ்வின் இலட்சியமாகும். ○

---

மனிதனிடம் தீமையின் ஓர் அம்சமும் இருக்கிறது. அதுவே கீழ்த்தரமான ஆசைக்கு இலக்கான ஆன்மா. அதுவே வெறிக் குணத்திற்கும், காமத்திற்கும் இருப்பிடமாக இருக்கிறது. கடவுளுடன் தொடர்பு கொள்ள அதுவே பெரிய முட்டுக்கட்டையாக இருக்கிறது.

—தர்ம சித்தாந்தம்

மகனே! பிறவிப் பெருங்கடலை எவ்வாறு நீந்துவது என்று என்னை நீ கேட்டாய். அதற்கு வழி சொல்லுகிறேன், கேள். மேற்குலத்தோன், கீழ்க்குலத்தோன், சண்டாளன், சடை தரித்தோன், யாராக இருப்பினும் சரி, அன்போடு சிவனை வழிபட்டு, திருநீறு அணிந்துகொள்பவன் பிராம்மணன் ஆகிவிடுகிறான். ஐந்தெழுத்து மந்திரத்தைச் சொல்லி, அன்போடு சிவலிங்கத்தின் மீது மலரை வைத்து ஒருவன் வழிபட்டு வருவானாயின், அவனுக்கு மீண்டும் பிறவிப் பிணி கிடையாது. இதை நீ அறிக.

—பஞ்சதந்திரம்

---






## வள்ளலார் வாக்கு

1. பகட்டான உடுப்பும் நடத்தையும் ஆன்மிகத்துக்குப் புறம்பானவை.

2. யாரிடத்தில் தயை அதிகப்பட்டிருக்கிறதோ அவரிடத்தில் கடவுள் இருக்கிறர். அந்தத் தயை இல்லாதவர்களிடத்தில் கடவுள் இருந்தும் இல்லாமையாய் இருக்கிறர்.

3. வெள்ளம் வருமுன்னே அணைபோட்டுத் தடுக்க வேண்டும். அது போல, மேலான கதியை அடைய விரும்புகிறவன், தன்னைத் தீய குணங்கள் அணுகாதவாறு முன்கூட்டியே தடுக்க வேண்டும்.

4. அகங்காரத்தை அகற்றிச் சான்றோரை அடுத்து வாழ்ந்து, தவசியர் போல் பிறருக்கு உபகாரம் செய்து வாழ்வது இறைநெறியில் செல்ல உதவும்.

5. உள்ளத்துக்குள்ளே நோக்குகின்றவர் களுக்கு இறைஒளி உண்டாகும்.

6. ஏகாந்தத்தில் அமர்ந்து இறைவனை நினைப்பதும், இறை அன்பர்களுடன் தொடர்பு கொள்வதும் இறைநெறியில் செல்ல உதவும்.

7. தீமை இல்லாத புகழ் இறைவன் ஒருவனுக்குத்தான் உண்டு.

8. வன்மை நெறியில் செல்வோரை அழைத்து, நன்னெறியில் செலுத்தும் இயல்பு இறைவனுக்கு உண்டு.

9. தம்மைக் கருத்தில் இருத்திப் போற்று வோரை இறைவன் கைவிடமாட்டான்.

10. இறைவனது கருணைக்கு நிகரான கருணை வேறு கிடையாது.

11. இறைவன் வழிப்படி நடந்தாலன்றி, துன்பம் துயர்களினின்று விடுபட முடியாது

12. இறைவன் திருவருள் சம்மதமின்றி உலகில் எதுவும் நடைபெறுவதில்லை.

13. இறைவா! அருள்புரிவது உனது இயற்கை என்பதை உலகம் அறியும். இருந்தும் மருள் நிறைந்த வாழ்க்கை வாழ்வோருக்கு நீ அருள் புரியாவிட்டால் வேறு உய்தி ஏது?

14. கனவிலும் வஞ்சனை நினையாதவர் களுக்குத்தான் இறைவனது இன்னருள் கிட்டும்.

15. பிள்ளைகள் அறியாமற் செய்யும் குற்றங் களைப் பெற்ற தாய் ஓரளவுதான் பொறுப்பாள். ஆனல் இறைவனே மக்கள் ஓயாமற் செய்யும் குற்றங்களைப் பொறுக்கும் இயல்புடையவன். அத்தகைய இறைவனை வாழ்த்தாமல் வாளா இருப்பது கொடுமையிலும் கொடுமை.

16. இறைவனும் தானும் ஒன்ருகக் கலப்பதே பேரானந்த நிலையாகும். உலகீர்! அந்தப் பெரும் பேற்றைப் பெற்று நீவிர் இனிதே வாழ்க.

17. இறையருளைப் பெற விழைவோர் ஈன உடல்மீது இச்சை வைத்தலாகாது.

18. செருக்குற்ற செல்வச் சீமான்களை வாழ்த்திப் போற்றி வழிபடுவதைவிட, இறை வனைக் கைகூப்பி வணங்குவது நன்மை பயக்கும்.

19. இறைவா! உன்னை வணங்காதவர் தலையை மாட்டுத் தலை, ஆட்டுத் தலை, பன்றித் தலை, நாய்த் தலை என்று அழைப்பதே பொருந் தும்.

20. கணவனுக்கும் மனைவிக்கும் உள்ள தொடர்போ, கூடுவதும் பிரிவதுமாய் உள்ளது. இறைவா! எனக்கும் உனக்கும் இடையில் ஏற்பட்டுள்ள தொடர்போ, என்றும் நிலைத்துப் பேரானந்தம் விளைவிப்பதாய் உள்ளது.

21. சின்ன வயதில் என்னை நீ ஆட்கொண்ட திறத்தை நினைக்க நினைக்க, ஆனந்தக் கண்ணீர் பெருகி, எனது உடம்பு முழுவதையும் நனைத்து விட்டது.

22. இறைவா! உன்னை வாயாரப் புகழ்ந்து பாடுவோர் எனக்கு நேயர் ஆவர்; நேயராயினும் உன்னைப் பரவாமல் இருப்போர் எனக்கு எட்டிக் காய் போலக் கசப்பவர் ஆவர்.

23. அரசர் வாழ்வை நான் விரும்பவில்லை; இகலோக வாழ்க்கையில் சிக்குண்டு மாளப் பிரியப் படவில்லை; விண்ணுலக வாழ்வின் மேன்மை யிலும் எனக்கு நாட்டம் இல்லை. உனது திருவருளைத் தவிர வேறு எதிலும் எனக்கு ஈடுபாடு இல்லை.

24. செல்வம் ஒன்றை மட்டுமே மதித்திடு வோரின் அருகில் அமர்ந்து, உண்ணவும் பருகவும் என் மனம் ஒப்பவில்லை.

25. இறைவா! உன் இன்னருள் இன்று கிட்டுமோ? நாளை கிட்டுமோ? என்று கிட்டுமோ? ஒன்றும் புரியவில்லையே!

26. கல்லையொத்த நெஞ்சமே! இறைவன் இருக்கிறனு இல்லையா என்று ஐயப்பட்டுத் தவிக்காதே. தாமதியாமல் திருவொற்றியூர் இறைவனை நினைத்தால் நீ நற்கதி பெறுவாய்.

27. இறையருள் பெற்றவர்கள் பிறருக்குத் துணையாக நின்று உதவுவர்.

28. பெரியோருடைய இயல்பு இறைவனை வணங்குவது.

29. சாதுக்களின் சங்க மகத்துவத்தைச் சாதுக் களைத் தவிர்த்துப் பிறரால் அறிய முடியாது.

30. ஐம்பொறிகளை அடக்கி வாழும் பெரி யோரிடம் இறைவன் உறவுகொண்டாடுவான்.

31. நாயே பார்த்து நகைக்கும்படி இழிந்த வாழ்வு வாழ்வது கூடாது.

32. யாரையும் கடுகடுத்த நோக்குடன் பாரா தீர்கள்; முகமலர்ச்சியுடன் நோக்குங்கள். ●

---

## ஸ்ரீராமகிருஷ்ண—விவேகானந்த இளைஞர் மாநாடு

தில்லி, ஸ்ரீராமகிருஷ்ண ஆசிரமம் செப்டம்பர் 9, 10, 11 ஆகிய மூன்று நாட்களும் 'ஸ்ரீராம கிருஷ்ண-விவேகானந்த இளைஞர் மாநாடு' ஒன்றைப் பெரிய அளவில் நடத்தியது. சுவாமி புதானந்தர் இளைஞர்களுக்குப் பயன்படும் வகையில் நன்கு திட்டமிட்டு இந்த மாநாட்டை நடத்தி உள்ளார்.

ஸ்ரீராமகிருஷ்ண சங்கத்தின் பொதுச் செயலாளர் சுவாமி வந்தனனந்தர், சுவாமி ரங்க நாதானந்தர், சுவாமி ஆத்மானந்தர், இந்தியக் குடியரசுத்தலைவர் ஜைல்சிங் ஆகியோர் மாநாட்டில் கலந்துகொண்டு உரை நிகழ்த்தினர்.

இந்திய இளைஞர்களுக்கு ஸ்ரீராமகிருஷ்ணர்-விவேகானந்தர் ஆகியோரின் கருத்துக்கள், இளைஞர்களின் கடமை, பாமரமக்கள் முன்னேற்றத்திற்கு இளைஞர்கள் மேற்கொள்ள வேண்டிய பணிகள், இளைஞர்களும் ஒழுக்கமும், சிறந்த இளைஞர்களை உருவாக்குதல், ஸ்ரீசாரதாதேவியார் வாழ்ந்து காட்டிய வேதாந்த வாழ்க்கை, சிறந்த மனிதர்களை உருவாக்குவதே இன்றைய தலையாய தேவை, ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த இயக்கம், இளைஞர்களும் இன்றைய பிரச்னைகளும், நவீன உலகத்தில் தங்கள் பிரச்னைகளை இளைஞர்கள் எவ்விதம் எதிர் நோக்க வேண்டும் போன்ற பல தலைப்புகளின் கீழ் மூன்று நாள் மாநாட்டில் கருத்தரங்குகள், சொற்பொழிவுகள், விவாதங்கள் கலந்துரையாடல்கள் நடைபெற்றன.

மாநாட்டில் பாரதப்பிரதமர் திருமதி இந்திராகாந்தி கலந்துகொண்டு சிறப்புரை நிகழ்த்தினர். அதில் அவர் தெரிவித்த சில கருத்துக்கள் வருமாறு:

''ஆன்மிக உண்மைகளைத் தேடுவது என்பது மட்டுமே நமது தேசியமரபாக இருந்து வந்திருக்கிறது. இளைஞர்கள் கையில்தான் இந்தியாவின் எதிர்காலம் உள்ளது. எனவே ஆன்மிக உண்மைகளைத் தொடர்ந்து தேடவேண்டியது இந்திய இளைஞர்களின் தலையாய கடமையாகும். தியாக உள்ளத்துடன் நமது தேசத்திற்கும் இந்து மதத்திற்கும் தொண்டு செய்ய வேண்டும் என்ற தாரக மந்திரத்தை நமக்கு தந்தவர் சுவாமி விவேகானந்தர். சுவாமி விவேகானந்தர் கூறிய வழியில் நமது நாட்டின் அனைத்துத்துறை வளர்ச்சிக்கும் தியாக மனப்பான்மையுடன் இளைஞர்கள் தங்கள் பங்கைச் செய்ய முன் வரவேண்டும். பிரச்னைகளைத் தீர்ப்பதற்கு சில சமயங்களில் சுலபமான வழி சிறந்த வழியாக இராது. போராடித்தான் வாழ்க்கையில் முன்னேற வேண்டும். அப்படிப் போராடுவதில் ஒரு மனிதன் மன வலிமையையும் பெறுகிறன். நமக்குள் நாம் பூசலிட்டால் நாம் பலவீனமடைவோம். ஓரணியாக முன்னேற கற்றுக்கொள்ள வேண்டும். சுயக்கட்டுப்பாடு உணர்வை நாம் வளர்த்துக் கொள்ள வேண்டும். ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மெய்ஞ்ஞானப் பேரொளி பிரகாசிக்கும் வரை இந்தியாவின் எதிர்காலமும் பிரகாசமாகவே இருக்கும்.''




## சுவாமி விஞ்ஞானனந்தரின் வரலாறு

சுவாமி விஞ்ஞானனந்தரின் பூர்வாசிரம நாமம் ஸ்ரீ ஹரிபிரசன்ன சட்டோபாத்யாயர் என்பதாகும். 'விளையும் பயிர் முளையிலே' என்ற பழமொழிக்கிணங்க, அவர் சிறுவயதில் வாய்மை மிகுந்தவராகவும், கடவுள் நம்பிக்கையுடையவராகவும் இருந்தார். வானரங்கள் சாகும் பொழுது இராமநாமம் ஜபிக்கும் என்று அவர் கேள்விப்பட்டிருந்தார். ஒரு நாள் மூங்கில் தோப்பில் குண்டடி பட்ட ஒரு குரங்கு கைகளை இணைத்துக்கொண்டு அழுததைக் கண்ட அவர் இராமநாமம் சொல்லிக்கொண்டே அது உயிரை விட்டதாக எண்ணினர்.

புனு கல்லூரியில் முதலாம் இரண்டாம் வகுப்புக்களில் தேர்ச்சி பெற்ற மாணவர்கள், பம்பாயில் ஆங்கிலச் சர்க்கார் உத்தியோகம் செய்யும் நியமம் அக்காலத்தில் இருந்தது. ஹரிபிரசன்னருக்கு அந்தத் தகுதி இருந்தும் தம்முடைய சக மாணவனை ராதிகாப்பிரசாத் மிகவும் ஏழை என்பதனுலும், சர்க்கார் உத்தியோகம் அவனுக்குத் தேவை என்பதனுலும் அந்த வருஷம் பரீட்சை எழுதாமல் விட்டுக்கொடுத்தார்.

1879-ஆம் வருஷம் செப்டம்பர் 15-ஆம் தேதி ஸ்ரீராமகிருஷ்ணரைச் சந்திக்கும் வாய்ப்பு அவருக்கு ஏற்பட்டது. ஸ்ரீராமகிருஷ்ணர், ''யார் ராமனே யார் கிருஷ்ணனே அவனே இந்த உடலில் ராமகிருஷ்ணன்'' என்று முதல்முறையாகக் கூறியதை ஹரிபிரசன்னர் கேட்டபொழுது அவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. மனதில், 'ஏதோ அப்படி இப்படிப் பேசினுலும் இவர் நல்லவர், எளிமையானவர்' என்ற எண்ணமே உண்டாயிற்று. பின்பு ஒருநாள் ஸ்ரீராமகிருஷ்ணர் ஸ்ரீகிருஷ்ணனிடம் கோபியர் வைத்திருந்த பிரேமையைப்பற்றிக் கூறிக்கொண்டிருந்த பொழுது, ''பிருந்தாவனத்தில் ராஸலீலை செய்த அவனேதான் இந்தத் தேகத்திலும் இருக்கிருன்'' என்ருர். அன்று பகவானின் முகத்தினின்றும் கண்களிலிருந்தும் வெளிப்பட்ட உணர்ச்சி, பாவத்திலும் பேச்சிலும் காணப்பட்டதொரு திடபாவம் எல்லோரிடமும் பரவுவதாக இருந்தது. ஹரிபிரசன்னருக்கும் அதைக் கண்கூடாகக் கண்ட பின்பு நம்பிக்கை ஏற்படாமல் இருக்க முடியவில்லை.

அவர் கடவுள்நம்பிக்கையோடு கடமையுணர்வும் உடையவராக விளங்கினர். புனுவிலிருந்து பொறியியல் கல்லூரியில் தேறிய பிறகு காஜிப்பூரில் 'டிஸ்ட்ரிக்ட் இஞ்சினியர்' பதவியேற்ருர். தம் தாயின் ஜீவனம் நடத்துவதற்குத் தேவையான நிரந்தர வருவாய்க்காகவும், இளைய சகோதரரின் கல்விச்செலவுக்காகவும் தேவையான அளவு பொருள் சேமித்த பிறகு அவர் சம்சார பந்தங்களிலிருந்து விடுபட்டு, ஆலம்பஜார் மடத்தில் மிகவும் எளிமையான தாழ்மையுள்ள பிரம்மசாரியாகத் தம் துறவிச் சகோதரர்களுடன் சேர்ந்துகொண்டார்.

சம்சாரக் கடலைக் கடக்க வழிகாட்டியாக அமைவது சிறந்த சாதகன் தன் வாழ்நாளில் கடைப்பிடிக்கும் இலட்சியமேயாம். ''எப்போதும்

> மனிதர் உங்களுக்கு எப்படிச் செய்ய வேண்டும் என்று விரும்புகிறீர்களோ, அப்படியே நீங்களும் அவர்களுக்குச் செய்யுங்கள். நீங்கள் எந்த அளவினுல் அளக்கிறீர்களோ, அதே அளவினுல் உங்களுக்கும் அளக்கப்படும். —நற்செய்தி

உண்மையே பேசுவேன். பிறர் பொருளை அவரறியாமல் எடுத்தால் அது களவாகும்—என்ற இந்த இரண்டு நீதிகளையும் கடைப்பிடித்து வந்தால் மற்ற எல்லாம் எளிதில் கைகூடிவிடும்'' என்று அவர் கூறுவார். ஆன்மிகச் சாதனையில் தம்மை மூழ்கச்செய்வதே அவருடைய இலட்சிய மாக இருந்தது.

சுவாமி விஞ்ஞானனந்தர் நோயுற்றபோதிலும் மருத்துவரிடம் செல்லமாட்டார். ஆனல் இறுதிக் காலத்தில் அவருடைய கால் வீங்கியிருந்ததைக் கண்ட ஒரு சாது, ''யாரேனும் மருத்துவரிடம் செல்வது நல்லது'' என்ருர். அந்தச் சாது பிரபல டாக்டர் ஒருவர் பேலூருக்கு அடிக்கடி வருவதாகவும், அவரை அழைக்கலாம் என்றும் கூறினர். அதற்கு சுவாமிஜி, ''அவரையும்விட உயர்ந்த டாக்டர் இருக்கிருரா?'' என்று வினவினர். ''நீலரத்தின பாபு அவரையும்விடக் கெட்டிக்காரர்'' என்று பதில் வந்தது. மீண்டும் ஒரு கேள்வி: ''அவரையும்விட உயர்ந்தவர்?'' இதற்குப் பதிலாக, ''அவரைவிடச் சிறந்தவர் வேறு யாரும் இங்கு இல்லை'' என்று வந்தது. சுவாமி விஞ்ஞானனந்தர், ''ஒருவர் இருக்கிருர். அவரே ஸ்ரீராமகிருஷ்ணர். அவரைவிடச் சிறந்தவர் வேறு யாருமில்லை'' என்ருர். ஸ்ரீராமகிருஷ்ணரின் மீது எல்லா விதத்திலும் நம்பிக்கை வைத்திருந்த அவர் அடிக்கடி பேச்சிலும் அதை வெளிப்படுத்துவதுண்டு.

'கடவுளை நம்பினேர் கைவிடப்படார்' என்ற நம்பிக்கையே மனித வாழ்வின் ஜீவாதாரமாகும். சுவாமி விஞ்ஞானனந்தருக்குப் பலமுறை கடவுள் தரிசனம் கிடைக்கும் பாக்கியம் கிட்டியது. அவர் ஒரு முறை சேவாசிரமம் கட்டுவதற்காக அலகாபாத்திலிருந்து காசிக்குச் சென்ருர். ரெயில் நிலையத்திலிருந்து குதிரைவண்டியில் சென்றபொழுது பாதையில் ஒரு திருப்பத்தில் வண்டி கவிழ்ந்து, அதனல் அவருக்குப் பெரிய விபத்து ஏற்பட்டது. அது காரணமாக அவருக்கு ஜுரம் கண்டது. அப்பொழுது அவர், 'ஹே விசுவநாதா! ஸ்ரீராமகிருஷ்ணரின் பணியில் ஈடுபட்டு உன் ராஜ்யத்திற்கு வந்தேன். சுயநலமற்ற வேலை ஏன் இப்படியாயிற்று? வேலைக்குத் தடங்கல் வருகிறதே!' என்று எண்ணினர். அவர் கனவில் சடைமுடி தரித்த சிவபெருமான் புன்சிரிப்புத் தவழும் முகத்துடன் தம்மை நோக்கி வருவதைப் போலக் கண்டார். சிவபெருமான் தம்மை அழைத்துச் செல்லவே வந்திருக்கிருர் என்று எண்ணினர். ''என்ன பெருமானே! என்னை அழைத்துச் செல்ல வந்திருக்கிறீர்களா? நான் வரமாட்டேன். ஸ்ரீராமகிருஷ்ணரின் பணி இன்னும் இருக்கிறது; அதை முதலில் செய்ய வேண்டும்'' என்ருர்.

சிவபெருமான் சிரித்துக்கொண்டே அருகில் வந்து அவரைக் கட்டியணைத்துக்கொண்டார். அந்தக் குளிர்ந்த ஸ்பரிசத்தால் அவருடைய வேதனையெல்லாம் பறந்தோடியது. சிவபெருமானை நோக்கி அவர், ''இப்போது போய் வாருங்கள். ஸ்ரீராமகிருஷ்ணருடைய வேலை செய்ய வேண்டும்'' என்று கூறினர். மறுநாள் ஜுரம் ஏதுமில்லை; காலில் வலியில்லை; எல்லாம் குணமாகிவிட்டது. திரிவேணி சங்கமத்தில் நீராடிய பிறகு, திரிவேணிமாதாவின் தரிசனமும் கிடைத்தது.

'மாதா பிதா குரு தெய்வம்' என்ற முதுமொழிக்கு இணங்க, அவர் தம் பெற்ற தாயிடம் கொண்டிருந்த பேரன்பும், மனம் என்னும் நிலத்தை உழுது, அதில் அவநம்பிக்கை காமம் காஞ்சனம் என்னும் களைகளை நீக்கி, நம்பிக்கை என்ற விதையை ஊன்றி, கருணை என்ற நீர் வார்த்து, இறையன்பு என்ற பூ மலர, அதையே தம் குரு ஸ்ரீராமகிருஷ்ணருக்குக் காணிக்கையாக்கும் இயல்பினை நல்கிய அருட்கடலாம் குருவினிடத்தில் அவர் கொண்ட நம்பிக்கையுமே அவர் வாழ்நாளில் பல தெய்வ தரிசனங்கள் காண்பதற்கு ஏதுவாயின. இதை அவரே, ''பெற்ற அன்னை மகிழ்வுடன் இருந்தால் ஸ்ரீராமகிருஷ்ணரும் விரைவிலேயே கிருபை காட்டுவார்'' என்பார். ○

---

ஆசையை விட்டவனுக்கு அதிகாரத்தில் நாட்டம் இருக்காது. சிற்றின்ப நாட்டம் இல்லாதவனுக்கு, தன்னை அழகுபடுத்திக் கொள்வதில் ஆசை இருக்காது. பேச்சில் கள்ளம் கபடம் இல்லாதவனிடத்தில் வஞ்சனை இராது.

—பஞ்ச தந்திரம்

---

# அருள்நெறிக் கதை

## வாய்மையே வெல்லும்

**நாடோடி**

முன்னொரு காலத்தில் சத்தியம் தவருத ஓர் அரசர் இருந்தார். தமது நகரத்திற்கு யார் பொருள் விற்க வந்தாலும் மாலைநேரத்திற்குள் அதை அவர்கள் விற்காவிட்டால் அரசாங்கம் அதை விலை கொடுத்து வாங்கிக்கொள்ளும் என்று அவர் சத்தியம் செய்திருந்தார்.

ஒரு சமயம் அவரைப் பரிசோதிப்பதற்காக, தருமதேவர் பிராம்மண வேஷத்தில் அந்த நகரத்திற்கு வந்தார். அவர் ஒரு பெட்டி நிறையக் குப்பையையும் கூளத்தையும் நிறைத்துக் கொண்டு அதை விற்பதற்காக அந்த அரசரின் நாட்டிற்கு வந்து சேர்ந்தார். மாலைநேரம் நெருங்கியது. ஆனல் அவருடைய பெட்டியை வாங்குவோர் யாருமில்லை. இதைக் கண்ட அரசதூதர்கள் அவர் பெட்டியில் என்ன வைத்திருக்கிருர் என்று கேட்டார்கள்.

பெட்டி நிறையத் தரித்திரம் இருப்பதாகவும், அதன் விலை ஆயிரம் ரூபாய் என்றும் அவர் சொன்னர்.

அரசனுடைய சத்தியத்தைக் காப்பதற்காக அரசதூதர்கள் அந்தப் பெட்டியை இருநூறு ரூபாய்க்குத் தங்களுக்குக் கொடுக்கும்படி கேட்டார்கள். ஆனல் பிராம்மணரோ ஆயிரம் ரூபாய்க்கு ஒரு தம்பிடிகூடக் குறைக்க முடியாது என்று சொல்லிவிட்டார்.

உடனே அரசதூதர்கள் அரசனிடம் சென்று விஷயத்தைச் சொன்னர்கள். அதற்கு அரசர், ''என்ன விலையானலும் சரி, நான் வாங்கிக் கொள்வதாகச் சத்தியம் செய்திருக்கிறேன். ஆகவே அவர் என்ன கேட்டாலும் கொடுத்து அந்தப் பெட்டியை வாங்குங்கள்'' என்ருர்.

அரசதூதர்கள் திரும்ப வந்து அந்தப் பெட்டிக்கு ஐந்நூறு ரூபாய் கொடுப்பதாகச் சொன்னர்கள். ஆனல் அதற்கும் பிராம்மணர் மறுக்கவே கடைசியில் ஆயிரம் ரூபாய் கொடுத்து, குப்பையும் கூளமும் நிறைந்த அந்தப் பெட்டியை வாங்கி அரண்மனைக்குக் கொண்டு வந்தார்கள். அதை ஒரு மூலையில் வைக்கும்படி அரசர் உத்தரவிட்டார்.

அன்று இரவு மாளிகைக்கு வெளியில் அரசர் உட்கார்ந்திருந்தபோது யாரோ ஓர் அழகிய ஸ்திரீ மாளிகையிலிருந்து வெளிப்படுவதைக் கண்டார். அந்தப் பெண்மணியைப் பார்த்து, ''நீ யார்? எங்கே செல்கிருய்?'' என்று அவர் கேட்டார். அதற்கு அவள், ''நான்தான் லக்ஷ்மி. நீ சத்திய வாதி என்பதற்காகத்தான் இத்தனை நாளும் உன்னேடு இருந்தேன். இப்பொழுதோ நீ தரித்திரத்தை உன்னேடு வைத்துக்கொண்டுவிட்டபடியால் நான் வெளியேறுகிறேன்'' என்ருள்.



''உங்கள் விருப்பப்படியே செய்யுங்கள்'' என்ருர் அரசர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் அரண்மனையிலிருந்து ஓர் அழகிய புருஷர் வெளியே வந்தார். ''நீங்கள் யார்? எங்கே போகிறீர்கள்?'' என்று அரசர் கேட்டார். அதற்கு அவர், ''என் பெயர் நல்லொழுக்கம். தாங்கள் சத்தியசந்தர் என்பதற்காக இத்தனை நாளும் தங்களோடு இருந்தேன்.

இப்பொழுது லக்ஷ்மியும் தானமும் தங்களை விட்டுச் சென்றபடியால் நானும் வெளியே செல்லு கிறேன்'' என்ருர். ''சரி'' என்ருர் அரசர்.

இன்னும் சிறிது நேரத்திற்கெல்லாம் மற்ருேர் அழகிய புருஷர் வெளியே வந்தார். ''தாங்கள் யார்? எங்கே செல்கிறீர்கள்?'' என்று அரசர் கேட்டார். அதற்கு அவர், ''என் பெயர் கீர்த்தி. தாங்கள் சத்தியவான் என்பதற்காக இத்தனை நாளும் தங்களோடு இருந்தேன். ஆனுல் இப்பொழுதோ லக்ஷ்மி, தானம், ஒழுக்கம் ஆகிய மூன்றும் தங்களை விட்டுச் சென்றுவிட்டபடியால் நானும் வெளியே போகிறேன்'' என்ருர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் மற்றுமோர் அழகிய புருஷர் வெளியே வந்தார். அவரைப் பார்த்து அரசர், ''தாங்கள் யார்? எங்கே செல்லு கிறீர்கள்?'' என்று கேட்டார்.

அதற்கு அவர், ''நான்தான் சத்தியம். நான் உன்ஞேடு நிரந்தரமாக இருக்கத்தான் நினைத் தேன். ஆனுல் இப்பொழுது லக்ஷ்மி, தானம், ஒழுக்கம், கீர்த்தி எல்லாம் உன்னை விட்டு நீங்கிய படியால் நானும் செல்கிறேன்'' என்ருர்.

இதைக் கேட்டதும் அரசர் சத்தியத்தின் காலில் விழுந்து வணங்கினுர். ''தாங்கள் என்னை விட்டு நீங்கக் கூடாது. தங்களுக்காகத்தான் நான் லக்ஷ்மி, தானம், ஒழுக்கம், கீர்த்தி ஆகிய எல்லாவற்றையும் தியாகம் செய்தேன்'' என்ருர்.

இதைக் கேட்டதும் சத்தியபுருஷர், ''அப்படி யானுல் நான் உன்னை விட்டு நீங்கவில்லை. உன்னுடனேயே இருக்கப்போகிறேன்'' என்ருர்.

கொஞ்ச நேரத்துக்கெல்லாம் கீர்த்தி திரும்பி வந்தார். ''நீங்கள் யார்? எங்கு வந்தீர்கள்?'' என்று அரசர் கேட்டார். கீர்த்தி, ''மனிதன் லக்ஷ்மி இல்லாமலும், தானம் இல்லாமலும், ஒழுக்கமில்லாமலும் இருக்கலாம். ஆனுல் சத்தியம் உள்ள இடத்தில் கீர்த்தி இருந்துதான் ஆக வேண்டும். அதனுல்தான் திரும்பி வந்துவிட் டேன்'' என்ருர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் ஒழுக்கம் திரும்ப வந்தார். ''தாங்கள் யார்? எங்கு வந்தீர்கள்?'' என்று அரசர் கேட்டார். அதற்கு அவர், ''நான் தான் ஒழுக்கம். ஒரு மனிதன் லக்ஷ்மி இல்லாம லும், தானம் இல்லாமலும் இருக்கலாம். ஆனுல் சத்தியமும் கீர்த்தியும் உள்ள இடத்தில் ஒழுக்கம் இருந்துதான் ஆக வேண்டும். ஆகவே திரும்ப வந்துவிட்டேன்'' என்ருர்.

சற்று நேரத்திற்கெல்லாம் தானம் திரும்ப வந்தார். ''தாங்கள் யார்? எங்கு வந்தீர்கள்?'' என்று அரசர் கேட்டார். அதற்கு அவர், ''நான் தான் தானம். ஒரு மனிதன் லக்ஷ்மி இல்லாம லிருக்கலாம். ஆனுல் சத்தியம், கீர்த்தி, ஒழுக்கம் உள்ள இடத்தில் தானம் இருந்துதான் ஆக வேண்டும். ஆகவே நான் திரும்பிவிட்டேன்'' என்ருர்.

சிறிது நேரத்திற்கெல்லாம் லக்ஷ்மி அங்கே வந்தாள். ''தாங்கள் யார்? எங்கு வந்தீர்கள்?'' என்று அரசர் கேட்டார். அதற்கு லக்ஷ்மி, ''எப்பொழுது தங்களிடம் சத்தியம், கீர்த்தி, ஒழுக்கம், தானம் எல்லாம் இருக்கின்றனவோ அப்பொழுது நானும் கட்டாயம் இருந்துதான் ஆக வேண்டும். ஆகவே திரும்பிவிட்டேன்'' என்ருள்.



சிறிது நேரத்திற்கெல்லாம், குப்பையை விற்ற பிராம்மணர் அங்கே தோன்றினுர். ''நீங்கள் யார்? எங்கு வந்தீர்கள்?'' என்று அரசர் கேட் டார்.

''நான்தான் தருமராஜன். உன்னைச் சோதிப் பதற்காகவே இந்த உருவில் வந்தேன். எங்கே சத்தியம் இருக்கிறதோ, அங்கே லக்ஷ்மியும் கீர்த்தியும் தானமும் ஒழுக்கமும் இருக்கும் என்பதை உன் வாழ்க்கையிலிருந்து உலகம் தெரிந்துகொள்ளட்டும் என்றுதான் இவ்வுருவில் வந்தேன்'' என்று சொல்லி, அரசனை வாழ்த்தி மறைந்தார். ○

# முன்னேறிச் செல்லுங்கள்!

சுவாமி விவேகானந்தர்

எனது வீர இளைஞர்களே! உத்தம குணம் வாய்ந்த நல்லோர்களே! செயல், செயல் புரியத் தொடங்குங்கள். தேச முன்னேற்றம் என்னும் தேர்ச் சக்கரத்தைக் கிளப்புவதற்கு உங்கள் தோள்களைக் கொடுங்கள். பெயர், புகழ் போன்ற எந்த அற்ப விஷயத்திற்காகவும் நீங்கள் நின்று திரும்பிப் பார்க்க வேண்டாம். சுயநலம் என்பதை அறவே தூர எறிந்துவிட்டு வேலை செய்யுங்கள்.

முன்னேறிச் செல்லுங்கள்! அளவற்ற சக்தி, அளவற்ற ஊக்கம், அளவற்ற தைரியம், அளவற்ற பொறுமை ஆகியவை நம்மிடம் இருக்க வேண்டும். அப்போதுதான் மகத்தான பணிகளைச் சாதிக்க முடியும்.



குழந்தாய்! நான் வேண்டுவது என்ன தெரியுமா? இரும்பு போன்ற தசைகள்; எஃகுப் போன்ற நரம்புகள்; இவற்றினுள்ளே இடியேறு போன்ற வலிமையுள்ள மனம்—இவையே எனக்கு வேண்டும். வலிமை, ஆண்மை, க்ஷத்திரிய வீரியத்துடன் கூடிய பிரம்மதேஜஸ்—இவை வேண்டும்.

கீழ்ப்படிந்து நடப்பது என்ற நற்குணத்தை வளர்த்துக்கொள். ஆனால் உன் சொந்த நம்பிக்கையை மட்டும் கைவிடாதே. தலைவர்களுக்குக் கீழ்ப்படிதல் இல்லாத வரையில், சக்திகளை ஒன்றுதிரட்டுவது சாத்தியமில்லை. தனி மனிதர்களின் சக்திகளை ஒன்றுசேர்க்காத வரையில் எந்தப் பெரிய காரியமும் செய்ய இயலாது.

உண்மை அல்லாதவற்றில் மிகவும் எச்சரிக்கையாக இருங்கள். உண்மையில் பிடிப்புள்ளவர்களாக இருங்கள். மெதுவாகவே என்றாலும், நிச்சயமாக நீங்கள் வெற்றி பெறப் போவது உறுதி. முழு வேலையும் உங்களையே பொறுத்திருப்பதாக நினைத்து, வேலையில் ஈடுபடுங்கள். எதிர்கால இந்தியா உங்களைப் பொறுத்தே அமையப்போகிறது. வேலை தொடரட்டும்.

ஒழுக்கம் உள்ளவனாக இரு. தைரியம் உள்ளவனாக இரு. இதயபூர்வமான, உறுதி பிறழாத ஒழுக்கத்தில் நிலைபெற்றிரு. மத சம்பந்தமான தத்துவ உண்மைகளைப் போட்டு உனது மூளையைக் குழப்பிக் கொள்ள வேண்டாம். கோழைதான் பாவம் செய்கிறான். தைரியசாலி ஒருபோதும் பாவம் செய்வதில்லை. மனதால் கூட அவன் பாவத்தை நினைப்பதில்லை.

அதிகார ஆசைக்கும் பொறாமைக்கும் பலியாகி விடாமல் மிகவும் ஜாக்கிரதையாக இரு. எப்பொழுதும் தன்னம்பிக்கையை வளர்த்துக் கொள்.

முதலில் ஆண்மை பொருந்திய மனிதர்களை உருவாக்குங்கள். ஆண்மை பொருந்திய மனிதர்களே நமக்கு இப்போது தேவை. சிரத்தை இல்லாவிட்டால் எப்படி ஆண்மை வாய்ந்தவர்களை உருவாக்க முடியும்?

எழுந்திருங்கள்! விழித்திருங்கள்! நீங்களும் விழித்திருங்கள், மற்றவர்களையும் விழிக்கச் செய்யுங்கள். உங்களுடைய இந்த உலக வாழ்க்கை முடிவடைவதற்கு முன்னால், மனிதப் பிறவியினால் பெறுவதற்கு உரிய பெரிய தன்மையை அடையுங்கள். எழுந்திருங்கள்! விழித்துக் கொள்ளுங்கள்! இலட்சியத்தை அடையும் வரையில் நில்லாமல் முன்னேறிச் செல்லுங்கள்!

புனிதமான வாழ்க்கையின் விளைவாக எழும் உற்சாகத்தினால் எழுச்சி அடைந்தவர்கள்; கடவுளிடம் அழியாத நம்பிக்கை என்பதை

அரசுகப் பெற்றவர்கள்; ஏழை எளியவர்களிடமும் தாழ்ந்தவர்களிடமும் ஒடுக்கப்பட்டவர்களிடமும் கொண்ட இரக்கம் காரணமாகச் சிங்கத்தைப் போன்ற தைரியம் அடைந்தவர்கள்—இத்தகைய ஆண்களும் பெண்களும் நூறுயிரம் பேர் வேண்டும். இவர்கள் மோட்சம், பரோபகாரம், தாழ்ந்தவர்களின் முன்னேற்றம், சமூக சமத்துவம் ஆகிய இந்த உயர்ந்த கொள்கைகளைப் பிரசாரம் செய்தபடி இந்த நாட்டின் ஒரு மூலையிலிருந்து மற்றெரு மூலைவரை செல்வார்கள்.

பரந்த இதயம் படைத்த நூற்றுக்கணக்கான ஆண்களும் பெண்களும் வாழ்க்கையின் ஆடம்பரங்களையும் எல்லா இன்பங்களையும் துறந்துவிட்டு, ஆதரவற்றநிலை, அறியாமை என்னும் நீர்ச்சுழலில் சிறிது சிறிதாக மிகக் கீழ்நிலைக்கு மூழ்கிச் சென்று கொண்டிருக்கும் நம் நாட்டுக் கோடானுகோடி மக்களின் நல்வாழ்விற்காக வருந்தித் தங்கள் முழு ஆற்றலையும் செலுத்தி உழைக்க எப்போது முன் வருவார்களோ அப்போதுதான் இந்தியா விழித்தெழும். ○

---

## குரு நானக் அருள்வாக்கு

எல்லா உயிரினங்களுக்கும் உணர்வு ஒரே நிலையில்தான் இருக்கிறது. இறைவன் உணர்வு—அறிவு இல்லாமல், எவரையுமே—எதையுமே படைக்கவில்லை. அவரவர் தம் உணவுக்கேற்ப வாழ்கிறார்கள். எல்லாருடைய கர்மாக்களின் பட்டியலும் ஒரே தரத்தில் உள்ளது. அவரவர் கர்மாக்களுக்கு ஏற்பப் பிறக்கவும் இறக்கவும் செய்கிறார்கள்.

ஏ சீவனே! நீ ஏன் சாமர்த்தியம்—தந்திரம் என்று பாடுபடுகிறாய்? கொடுக்கல், வாங்கலில் இறைவன் தாமதம் செய்வதில்லை. எல்லாச் சீவன்களும் இறைவனின் உடைமைகள்; அவற்றுக்கு ஒரே புரவலனும் அவனேதான். இறைவா! நீ ஏன் இந்த எளிய ஜீவன்களிடம் சினம் கொண்டிருக்கிறாய்? சினந்தாலும் இவை உன் படைப்புக்கள்; இவற்றுக்கு நீ தந்தை. நாங்கள் தப்பும் தவறுமாகப் பேசிக் காரியத்தைக் கெடுத்துக் கொள்கிறோம்; துன்பத்தைத் தேடிக்கொள்கிறோம்; எனினும் நீ உன் அருள்நோக்கால் எங்கள் தவறுகளை அறிந்துகொள்கிறாய். மனிதனின் செயல்கள் தூயனவாக இருந்தால், அறிவும் நிறைவுள்ளதாக இருக்கும். நற்செயலின்றி அறிவு தாழ்வுறும்.

குரு நானக் வேண்டிக்கொள்வதாவது: ஞானவான் முதலில் தன்னை அறிந்துகொண்டு, பிறகு பரம்பொருளை அறிகிறான். குருவின் அருளால் நற்சிந்தனைகளைப் பெறுகிறான். இத்தகைய ஞானவான்தான் இறைவன் திருவடிகளிலே உவப்புடன் ஏற்கப்படுகிறான்.

மாயையை எவரும் ஏமாற்ற முடியாது; கத்திகொண்டு அதைச் சிதைக்க முடியாது. பேராசை பிடித்தவனின் உள்ளம் பரிதவித்துக்கொண்டே இருக்கிறது. இறைவனிடம் ஒன்றிப் போகும் வரை இந்தப் பரிதவிப்பு இருக்கும். நம் உள்ளத்தில் எண்ணெய் இன்றித் துஞ்சாவிளக்கு எவ்வாறு ஒளிரும்? அறநூல்கள் காட்டும் வழியில் செல்வோம். இறைவனின் ஆணை என்ற திரியை உள்ளத்துள் வைப்போம். சத்திய ஞானம் என்ற சுடரால் அந்தத் திரியை எரிய விடுவோம். நற்செயல் எண்ணெயாகப் பயன்படும். இந்த அரிய விளக்கு எரியும். இதன் ஒளியில் இறைவனைத் தரிசிக்கலாம்.

இந்த உடலை ஆசாபாசங்களாகிய அம்புகள் பாய்ந்து துளைக்கின்றன. தொண்டு புரிந்தால் மகிழ்ச்சி ஏற்படுகிறது. இந்த உலகம் அழிவுள்ளது. எனினும் இந்த உலகில் தொண்டு புரிந்தால் பெருமானின் திருப்பாதங்களில் புகல் கிட்டும். நாம் கைவீசிக் கொண்டு மிக்க மகிழ்ச்சியுடன் அங்கே போய்ச் சேரலாம்.

என் உள்ளத்தில் ராமநாமம் என்ற தீபம் எரிந்துகொண்டிருக்கிறது. எனக்கு வேறு சிந்தனை எதற்கு? குருவின் அருள்வாக்குகளைத் தியானம் செய்துகொண்டிருப்பதனால் சுகம் கிட்டுகிறது. இறைவனிடம் ஈடுபாடு கொள்வதால் பேரின்பம் ஏற்படுகிறது. பரமனே! உன் விருப்பம் போல் என்னை வைத்திரு. என் பற்றுக்கோடாக ஹரிநாமத்தை ஏற்றிருக்கிறேன்.

மனமே! இறைவனின் விருப்பம்தான் சத்தியம். அவன் உடலையும் உள்ளத்தையும் உருவாக்கியபின், அவற்றை அழகுபடுத்தவும் செய்தான். அத்தகைய பெருமானிடம் ஈடுபாடு கொள். உடலைத் தினமும் தீயில் ஆஹுதியாக இட்டாலும், உடல்—உள்ளம் ஆகிய இரண்டையுமே சமித்தாக்கித் தினமும் அக்கினியில் ஹோமம் செய்து வந்தாலும், கோடிக்கணக்கான நியம நிஷ்டைகளைக் கடைப்பிடித்து வந்தாலும், இவை யாவும் ஹரிநாம ஜபத்திற்கு ஈடாகா. ரம்பத்தால் உடலை இருகூறுக அறுத்துப் போட்டாலும், இமயமலையுச்சியில் பனிப்பாறைகளில் உடலைப் போட்டுப் பலியிட்டாலும், மனநோயான அகந்தை விலகிவிடாது.

# காயத்திரி மந்திரம்

தி. வேங்கடகிருஷ்ணன்

நம் நாடு ரிஷிகளையும் முனிவர்களையும் பெற்ற பெருமையை உடையதாகும். நம் முன்னோர்களான முனிவர்களும் ரிஷிகளும் தங்கள் மனதையும் அறிவையும் ஒருமுகப்படுத்தி அதன் பயனாகப் பல அரிய செய்திகளைக் கண்டறிந்துள்ளனர். தவவலிமையால், மற்றோர் உலகத்தையே புதிதாகப் படைக்கும் ஆற்றல் வாய்ந்தவர்களும் இருந்துள்ளார்கள். இறைவனின் அருள்பெற்றுக் குறைவறப் பயன் நல்கும் மறைமொழியாம் மந்திரங்களை அறிந்த வித்தகர் பலர் எத்திசையும் போற்ற இலங்கியுள்ளார்கள். இவர்களால் இயற்றப்பட்ட வழிபாடே ஸந்த்யா வந்தனம் ஆகும்.

ஸந்தி என்றால் கூடுவது, சந்திப்பது என்று பொருள்படும். இராப் பொழுதும் காலைப் பொழுதும் சந்திக்கும் அல்லது கூடும் நேரம் காலை ஸந்தி அல்லது பிராதஸ் ஸந்த்யா எனப்படும். இவ்வாறே முற்பகலும் பிற்பகலும் கூடும் நேரம் இடைநாள் ஸந்தி அல்லது மத்யான்ன ஸந்தி எனப்படும். மாலையும் இரவும் சந்திக்கும் நேரம் மாலை ஸந்தி அல்லது ஸாயம் ஸந்த்யா எனப்படும். இந்த மூன்று வேளைகளிலும் செய்யப்படும் வழிபாட்டைத் திரிகால ஸந்த்யா வந்தனம் என்பர்.

நம் முன்னோர் 'ஒருவனே தேவன்' என்பதை நன்றாக அறிந்திருந்தார்கள். எனினும் 'பிந்நருசிர் ஹி லோக:' என்னும் கூற்றுக்கிணங்கப் பலருடைய சுவைவேறுபாடுகளுக்கு ஏற்பப் பல தேவதைகளை வழிபட்டனர். இதனால் வாழ்க்கையில் சலிப்பு ஏற்படாமல், உற்சாகம் உண்டாகும் என்பது அவர்கள் கருத்து. எனவே அவர்கள் ஸந்த்யாவந்தன வழிபாட்டை 'ஸந்த்யாதேவி' என்ற பெண்தேவதையைக் குறித்து ஏற்படுத்தினார்கள். இவ்வாறு வழிபடும் நிலையில் இருந்த தேவதையை மாயையின் தொடர்பற்ற, எல்லா உலகங்களுக்கும், ஜீவாத்மா, பரமாத்மா, பிரகிருதி ஆகிய மூன்று தத்துவங்களுக்கும் காரணமான, ஒப்புயர்வற்றுத் தனியாக விளங்குகின்ற சக்திதேவதையாகக் கருதினர். இந்தத் தேவதை கதிரவனின் மண்டலத்தில் வீற்றிருப்பதாகக் கருதித் தியானம்செய்து அவளுடைய உருவத்தை மனதில் இருத்திக் காயத்ரீ மகா மந்திரத்தை ஜபிக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்தனர். காயத்ரீ தேவியின் உருவத்தை வர்ணிக்கும் சுலோகம் வருமாறு—

காலையில் தியானம் செய்ய வேண்டிய சுலோகம் இது—

உதயாதித்யஸங்காசாம் புஸ்தகாக்ஷகராம்
ஸ்மரேத் ।
க்ருஷ்ணாஜிநதராம் ப்ராஹ்மீம் த்யாயேத்
தாரகிதேம்பரே ॥

இதன் பொருள்: உதயமாகும் சூரியனைப் போல் சிவந்து பிரகாசிப்பவளும், புத்தகம், அக்ஷமாலை என்னும் ஜபமாலை, மான்தோல் ஆகியவற்றைத் தரித்துள்ளவளும், பிரம்ம வடிவாக விளங்குகின்றவளுமான தேவியை விண்மீன்கள் விண்ணில் ஒளிவீசிக் கொண்டிருக்கும்பொழுதே தியானம் செய்கிறேன் என்பதாம்.



மத்யான்ன காலத்தில் தியானிக்க வேண்டிய ச்லோகம் வருமாறு—

ச்யாமவர்ணசதுர்பாஹூம் சங்கசக்ரலஸத்—
கராம் ।
கதாபத்மகராம் தேவீம் ஸூர்யாஸந—
க்ருதாச்ரயாம் ॥

மேகச்யாமள நிறமுள்ளவளாயும், நான்கு கைகளிலும் முறையே சங்கு, சக்கரம், கதை, தாமரைப்பூ ஆகியவற்றைக் கொண்டவளாயும்,

விஷ்ணு உருவாகவும், சூரிய மண்டலத்தின் நடுவில் விளங்குகின்ற காயத்ரீ தேவியைத் தியானம் செய்கிறேன் என்பது இதன் பொருள்.

மாலை ஸந்த்யா வந்தனத்தின்போது தியானிக்க வேண்டிய சுலோகம் வருமாறு—

சுக்லாம் சுக்லாம்பரதராம் வ்ருஷாஸந—
க்ருதாச்ரயாம் ।
த்ரிநேத்ராம் வரதாம் பாசம் சூலம் ச
ந்ருகரோடிகாம் ॥

அதாவது—வெண்மைநிறம் கொண்டவளும், வெள்ளை ஆடை அணிந்தவளும், மூன்று கண்களை யுடையவளும், சூலம், பாசம், அருட்கை, டமருகம் ஆகியவற்றுடன் விளங்குபவளும், காளை வாகனத்தில் அமருபவளும், சிவரூபத்தில் விளங்குபவளுமாகிய காயத்ரீதேவியைத் தியானம் செய்கிறேன் என்பது இதன் பொருள். இவ்வாறு மூன்று வேளைகளிலும் காயத்ரீதேவி மூன்று வெவ்வேறு வடிவில் கற்பனை செய்யப் படுகிறாள்.



இனி, 'ஸந்தியா வந்தனம் ஏன் செய்ய வேண்டும்? அதனால் ஏற்படும் நன்மைகள் யாவை?' என்பவற்றை நோக்குவோம்.

ஸந்தியா வந்தனம் நாள்தோறும் செய்ய வேண்டிய கடமையாக விதிக்கப்பட்டிருக்கிறது. மூன்று வேளையிலும் சூரியனை மந்தேஹர் என்னும் அவுணப் படைகள் சூழ்ந்து அழிக்க வருவதாகவும், அப்பொழுது இந்த நிலவுலகி லுள்ளோர் ஸந்த்யா வந்தனம் செய்து காயத்ரீ மந்திரத்தை ஜபித்து அர்க்யம் கொடுப்பதனால் அந்த அர்க்யம் அம்புகளாகச் சென்று அந்த அரக்கர்களை அழித்துச் சூரியனைக் காப்பதாகவும் சாத்திரத்தில் சொல்லப்பட்டுள்ளது. இதைப் பற்றிய நம்பிக்கை இல்லாவிட்டாலும், ஸந்த்யா வந்தனம் செய்யும்போது இறைவனின் திருநாமங்களைப் பலமுறை வணங்குவதனாலும், நாம் செய்துள்ள பாவங்களை மன்னிக்குமாறு மந்திரத்தின் மூலம் வேண்டி, மந்திரித்த தீர்த்தத்தை உட்கொள்வதனாலும், எல்லா மந்திரங்களுக்கும் மேலான காயத்ரீயை ஜபிப்ப தனாலும், இதைச் செய்பவர், பிரம்மத்தின் ஒளியைப் (தேஜஸ்) பெற்றுப் பரிசுத்தமாக, நோயின்றி நீடு வாழ்வர் என்பது ஒருதலை; மேலும், இந்த மண்ணுலக வாழ்வைத் துறந்த பின்பு பிரம்மலோகத்தை அடைவார் என்று சாத்திரங்கள் இயம்புகின்றன. ஆனால் இதைச் செய்யத் தவறினால் கடமை தவறிய காரணத் தால் பாவம் செய்தவர் ஆவார்.

## ஸந்தியாவந்தனம் செய்ய வேண்டிய முறைகள்

காலையில் கதிரவன் எழுவதற்கு முன்பும், நண்பகலில் உச்சிவேளைக்குச் சற்று முன்பும், மாலையில் கதிரவன் மறையுமுன்பும் ஸந்தியா வந்தனம் செய்ய வேண்டும். காலையில் கிழக்கு முகமாகவும், நண்பகலிலும் மாலையிலும் வடக்கு முகமாகவும் இருந்து செய்யவேண்டும். அர்க்யம், காயத்ரிஜபம், உபஸ்தானம் இவற்றைச் சூரியனை நோக்கிச் செய்ய வேண்டும்.

ஸந்தியா வந்தனத்தின்போது செய்யப்படும் பிராணாயாமமும் காயத்ரீஜபமும் மிகவும் முக்கிய மானவை. பிராணாயாமம் என்றால் மூச்சுக் காற்றைக் கட்டுப்படுத்தல் என்று பொருளாகும். ஒவ்வொரு நாளும் உள்ளம் உரை செயலால் செய்யப்படும் பாவங்களெல்லாம் பிராணாயாமத் தால் அழிந்து விடுகின்றன. ஓம் முதலிய மந்திரங்களுடன் கூடிய பிராணாயாமத்தை 12 முறை செய்தால் உடம்பு தூயதாகின்றது என்றும், 24 பிராணாயாமங்கள் செய்தால் தவம் செய்ததற்குச் சமமாகும் என்றும், முறைப்படி செய்யும் பிராணாயாமத்தால் உடலிலுள்ள நாடிகள் தூய்மை அடைவதுடன் ஜரிக்கும் ஆற்றலும் வளர்கிறது என்றும், நோயற்ற வாழ்வு வாழலாம் என்றும் சாத்திரங்கள் கூறுகின்றன. மேலும், இதனால் காமம் வெகுளி மயக்கம் முதலிய தீய குணங்கள் ஒழிந்து, மனம் தெளிந்து, அறிவு சுடர்விட்டு ஒளிரும். இவ்வளவு நன்மைகள் தருகிற பிராணாயாமத்தைச் சிரமப்படாமல் உடலின் ஆற்றலுக்கு ஏற்றவாறு செய்ய வேண்டும்.

## பிராணுயாமம் செய்யும் முறை

பிராணுயாமத்தில் மூன்று நிலைகள் அடங்கியுள்ளன. அவையாவன: 1. பூரகம் அல்லது வெளிக் காற்றை இடது மூக்குத் துவாரத்தின் மூலம் மெல்ல உள்ளே இழுத்து நிரப்புதல். 2. கும்பகம் அல்லது உள்ளே நிரப்பிய காற்றைச் சிறிது நேரம் உள்ளேயே நிறுத்தி வைத்திருத்தல். 3. ரேசகம் அல்லது உள்ளே நிறுத்திய காற்றை வலது மூக்குத்துவாரத்தின் வழியாக மெதுவாக வெளியே விடுதல். கட்டைவிரலால் வலது மூக்கையும், மோதிரவிரலால் இடது மூக்கையும் அமுக்கி, மூச்சை உள்ளே நிறுத்த வேண்டும். இவ்வாறு மூச்சை அடக்கும்போது சக்திக்கு மீறி அடக்கிச் சிரமப்படக்கூடாது.

### பிராணுயாம மந்திரம் வருமாறு

ஓம் பூ, ஓம் புவ:, ஓம் ஸுவ:, ஓம் மஹ:, ஓம் ஜந:, ஓம் தப:, ஓம் ஸத்யம், ஓம் தத் ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி, தியோ யோ ந: ப்ரசோதயாத்.

ஓமாப: ஜ்யோதீ ரஸ:, அம்ருதம் ப்ரஹ்ம பூர்புவஸ் ஸுவரோம்.

இதன் பொருள்: பூலோகமும், அதற்கு மேலேயுள்ள புவர்லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜனலோகம், தவலோகம், ஸத்தியலோகம் ஆக எழு உலகங்களும் ஓங்காரமே. ஓங்காரப் பொருளாகி நம்முடைய அறிவின் செயல்களைத் தூண்டும் பரம்பொருளின் திவ்ய தேஜஸ்ஸை (இறையொளியை) நாம் தியானம் செய்வோம். அது வழிபடத் தகுந்தது. அஞ்ஞான இருளையும் பாவத்தையும் அழிக்க வல்லது நீர், தீ முதலிய ஐம்பெரும் பூதங்களும், ஆறங்கங்களுடன் கூடிய வேதங்களும், முக்தி வடிவமும், அனைத்து உலகங்களும், உலகத்தின் மகிழ்ச்சிக்குக் காரணமான ஓங்காரமே, அதாவது பிரம்மஸ்வரூபம்தான்.



ஸந்தியா வந்தனத்தின் உயிர்நாடியாக விளங்குவது காயத்ரீ மகா மந்திரமாகும். பகவத் கீதையில் கண்ணபிரான், 'காயத்ரீ சந்தஸாம் அஹம்—சந்தங்களில் நான் காயத்ரீயாக உள்ளேன்' என்று அருளியிருக்கின்றுன். இவ்வாறே ஸந்தியா வந்தனத்திலே 'காயத்ரீ சந்தஸாம் மாதா—காயத்ரீ சந்தங்களுக்குத்தாய்' என்று கூறப்பட்டுள்ளது. காயத்ரீயின் மூன்று பாதங்களைப் பிரம்மா மூன்று வேதங்களிலிருந்து ஒவ்வொரு பாதமாக வடித்தார் என்றும், எனவே அது மூன்று வேதங்களின் சாரமாகும் என்றும் கூறுவர். இந்தக் காயத்ரீயை ஜபிப்பதனுல் மூன்று வேதங்களையும் ஓதுவதனுல் எற்படும் பயனைப் பெறலாம். காயத்ரீ என்பதற்கு, 'காயந்தம் த்ராயதே இதி காயத்ரீ—தன்னைப் பாடுபவரை உய்விக்கும் மந்திரம்' என்று பொருள். 'காயத்ரீயைவிடச் சிறந்த மந்திரம் வேறென்றில்லை' என்று பெரியோர் கூறியுள்ளனர். இந்த மந்திரத்தின் தனிச்சிறப்பு யாதெனில்.

---

நேர்மையான மனம் படைத்தவனுக்குச் சட்டம்தான் இறைவன். ஆனுல் முட்டாள்களுக்குக் கேளிக்கைகள்தாம் இறைவன்.
—பிளேட்டோ

தர்மத்துக்கு முரண்படாத நல்ல விருப்பங்களெல்லாம் ஈசனுடைய அம்சமாகவே கருத வேண்டும்.
—ராஜாஜி

மௌனமான தொடர்பின் மூலம் கடவுளின் அருளை நாம் நாடுவோமாக. பின்னர் அந்த அனுபவமானது நம் மனதில் என்றென்றும் நிலைத்திருக்கும்.
—காந்திஜி

இது மந்திரமாக மட்டுமில்லாமல், பிரார்த்தனை யாகவும் உள்ளது. இதில் மனிதனின் ஆன்மிகச் சக்தியின் உயர்ந்த நிலையை அடைய உதவும் மந்திரமும், அதன் பலனை அடையப் பிரார்த்தனை யும் அடங்கியுள்ளன. இத்தகைய காயத்ரீ மந்திரம் வருமாறு—

ஓம் பூர்புவஸ்ஸுவ:. தத் ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி, தியோ யோ ந: சோதயாத்.

இதன் பொருளை முன்பே பிராணாயாமத்தின் பொருளில் கண்டோம். இந்தக் காயத்திரியின் கருத்தை, மகாகவி பாரதியார் தமது 'பாஞ்சாலி சபத'த்தில் பின்வருமாறு கூறியுள்ளார் —

செங்கதிர்த் தேவன் சிறந்த ஒளியினைத்
தேர்கின்றோம்—அவன்

எங்களறிவினைத் தூண்டி நடுத்துக.

காயத்ரீ மகாமந்திரத்தின் சக்தியால்தான், அரசராக இருந்த விசுவாமித்திரர், பிரம்ம ரிஷியாகித் திரிசங்குவிற்காகத் தனிவுலகைப் படைக்கும்படியான ஆற்றலைப் பெற்றார். இந்த முனிவர், ராமலக்ஷ்மணரை வனத்தில் அழைத்துச் சென்றபோது அவர்களுக்குப் பசி தாகம் களைப்பு ஆகியவை ஏற்படாமலிருக்க உபதேசித்த பலா, அதிபலா என்ற மந்திரங்களில் காயத்ரீ மகாமந்திரம் உள்ளடங்கியிருப்பதைக் கீழே காணலாம். இந்த மந்திரத்துக்குச் சந்தஸ்ஸும் தேவதையும் காயத்ரீயே.

பலா:

ஓம் ஹ்ரீம், பலே மஹாதேவி, ஹ்ரீம் மஹாபலே,
க்ரீம் சதுர்வித-புருஷார்த்த ஸித்திப்ரதே,
தத் ஸவிதுர்—வரதாத்மிகே! ஹ்ரீம் வரேண்யம்
பர்கோ தேவஸ்ய வரதாத்மிகே.

அதிபலா:

அதிபலே ஸர்வதயாமூர்த்தே பலே ஸர்வக்ஷுத்·
ப்ரமோபநாசினி! தீமஹி தியோ யோ நோ
ஜாதே ப்ரகர்ய: யா ப்ரசோதயாத் ஆத்மிகே
ப்ரணவசிரஸ்காத்மிகே ஹும் பட் ஸ்வாஹா.

காயத்ரீ மந்திரத்தினுள் ஸாவித்ரீ மந்திரம் அடங்கியுள்ளது. காயத்ரீ மந்திரம் உபதேசிக்கப் படுவதற்கு மட்டுமே பிரம்மோபதேசம் செய்யப் படுவதாகக் கூறப்படுவதிலிருந்தே இதன் பெருமையை அறிந்துகொள்ள முடியும்.

இத்தகைய அரிய பெரிய பெருமைகளையுடைய காயத்ரீ மந்திரத்தைக் காலையில் 108-உம்' நண்பகலில் 28 உம், மாலையில் 108 உம், ஜபிப்பது மிகவும் நல்லது. நேரமில்லாத வர்கள் 10 காயத்ரீயாவது ஜபிக்க வேண்டும். உதடுகள் அசையாமல், மனதால் ஜபிப்பதே மேலானது. நாள்தோறும் சிரத்தையுடனும் பக்தியுடனும் ஒருமனத்துடனும் காயத்ரீயை ஜபித்துத் தெய்விக ஒளியும் தெளிவும் உடல் நலமும் பெற்று நெடிது வாழ்வோமாக. ○

---

அடக்கம் என்ற வேரிலிருந்துதான் தெய்விகக் குணம் கிளைத்து வளர்கிறது. —மூர்

ஒழுங்குபட்ட வாழ்க்கை நடத்தும் ஒருவன் இறைவன் ஆணைப்படி நிற்பவன் ஆவான்.
—திரு. வி. க.

காலினால் காலைத் தேய்த்துக் கழுவக் கூடாது. உட்காரும் ஆசனத்தைக் காலால் இழுத்து உட்காரக் கூடாது. —ஸ்வதர்மம்

சகல இன்பங்களையும் இழக்கச் செய்யும் மரணத்தை அதிகமாக நினைத்துக்கொள். அனைவரிலும் பெரிய வீரன் கோபத்தை அடக்குபவனே ஆவான். ஒரு பெரியவர்




சுவாமி கமலாத்மானந்தர்

கேள்வி: வானொலி உரையில் ஒருவர் ப்ரஹ்மாப் யாஸம் என்று குறிப்பிட்டார். ப்ரஹ்மாப் யாஸம் என்றால் என்ன?

பதில்: மனதைத் திரும்பத் திரும்பக் கடவுள் பற்றிய சிந்தனையில் ஈடுபடுத்திப் பழகுவது பக்தி யோகத்தில் 'அப்யாஸ யோகம்' எனப்படுகிறது. அதே கருத்து ஞானயோகத்தில் 'ப்ரஹ்மாப் யாஸம்' என்று அழைக்கப்பெறுகிறது.

சதா சர்வகாலமும் எந்த நிலையிலும் பரப் பிரம்மம் குறித்து வேதாந்தத்தில் சொல்லப் பட்டிருக்கும் கருத்துக்களையே சிந்தித்துக் கொண்டிருப்பது, பரப்பிரம்ம தத்துவம் பற்றிய உண்மைகளைத் தகுதி வாய்ந்தவர்களுக்கு எடுத்துச் சொல்வது, மகான் நிலையை அடைந்த வர்கள், விரைவில் அடையப்போகிறவர்கள் என்ற நிலையிலுள்ள ஆன்றோர்களுடன் பரப்பிரம்மம் குறித்துக் கலந்துரையாடுவது, எண்ணெய் ஒரு பாத்திரத்திலிருந்து மற்றொரு பாத்திரத்திற்கு ஊற்றப்படும்போது எவ்விதம் இடைமுறியாமல் ஒழுகுகிறதோ (தைலதாரை) அதுபோல் இடை முறியாமல் பிரம்மத்திலேயே கடலில் கரைந்த உப்புப் பொம்மை போல் நிரந்தரமாகக் கரைந்து நிலைபெற்றிருப்பது — இவை அனைத்தும் 'ப்ரஹ் மாப்யாஸம்' என்பதில் அடங்கும்.

கேள்வி: மாணிக்கவாசகர் போற்றித் திரு வகவலில் 'ஈசா போற்றி, இறைவ போற்றி' என்று பாடுகின்றாரே. 'ஈசன்', 'இறைவன்' இவற்றிற்கு இருவேறு பொருள் உண்டா?

பதில்: 'ஈசன்' என்பதற்கு எப்பொருளையும் உடையோன் அல்லது ஆள்வோன் என்று பொருள். 'இறைவன்' என்பதற்கு எப் பொருளிலும் தங்குகின்றவன் என்று பொருள். எப்பொருளையும் ஆள்வோன் என்றும் எப் பொருளிலும் உள்ளோன் என்றும் குறிப்பதற்காக மணிவாசகர் 'ஈசா போற்றி, இறைவ போற்றி' என்று போற்றுகின்றார்.

கேள்வி: தேகான்மா, அந்தரான்மா, ஜீவான்மா, பரமான்மா என்று பலவிதமாகக் கூறப்படு கின்றதே. இருப்பது ஓர் ஆன்மாவா? பலவா?

பதில்: ஆன்மா பல பேதங்களாக விளங்கும் என்பது ஆகமக் கருத்து. தேகான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, ஜீவான்மா, மந்திரான்மா, பரமான்மா என ஆறு பேதங்கள் உண்டு.

ஒருவன் ஸ்தூல உடம்பைத் தானாகக் கருதி ஒழுகும்போது அவன் தேகான்மா அல்லது பூதான்மா எனப்படுகிறான்.

நால்வகை வாக்கையும் அவற்றிற்கு ஆதார மான தனது இச்சை வெறுப்பு விருப்புக்களைத் தானாக ஒருவன் கொள்ளும்போது அவன் அந்தரான்மா ஆகிறான்.

பிருதிவி முதல் புருஷதத்துவம் வரையுள்ள ஆன்ம தத்துவங்களை, அதாவது அவற்றை அறியும் கருவியாகிய மனதையே தானாக ஒருவன் உணரும்போது அவன் தத்துவான்மா எனப் படுகிறான்.

மேலே சொன்ன அனைத்தையும் நான் அடக்கி ஆளக்கூடியவன் என்ற உணர்வு ஒருவனுக்கு உண்டாகி, அதனால் 'நான் பிரம்மம்' என்ற ஆணவ முனைப்பு ஏற்படும்போது முக்குண வயப்பட்ட ஜீவான்மா ஆவான். ['நான் பிரம்மம்' என்ற அத்வைத அனுபவத்தில் இருப்பது வேறு; ஆணவ முனைப்பு என்பது துவைத நிலையைச் சேர்ந்தது.]

யான் எனது என்ற பசுநிலையை நீக்கவும், முக்திப்பேற்றை அடையவும் விரும்பி மந்திரேச

பாசனையில் ஒன்றி நிற்கும்போது 'மந்திரான்மா' எனப்படுகிருன்.

முடிவில் அவன் இறைவனேடு உடனுய், இரண்டறக் கலந்து நிற்கும் நிலேயில் யாதுமற்ற அவன் பரமான்மா ஆவான்.

எனவே ஒரே ஆன்மா அதன் அறிவுநிலேயைப் பொறுத்தும், அது சார்ந்து நிற்கும் பொருளேப் பொறுத்தும் பல பேதங்களாக விளங்கும்.

கேள்வி: நவராத்திரி விழாவை இந்தியா முழுவதும் கொண்டாடுகிருர்கள். எனினும் எங்கும் ஒரே மாதிரியாக இல்லாமல் சில இடங்களில் துர்க்காபூஜைக்கும், சில இடங்களில் லட்சுமி பூஜைக்கும், சில இடங்களில் சரஸ்வதி பூஜைக்கும் நவராத்திரி சமயத்தில் முக்கியத்துவம் கொடுத்துக் கொண்டாடப் படுகிறது. இதற்கு என்ன காரணம்?

பதில்: நமது தாயகமான பாரததேசத்தைச் சக்தியின் அம்சம் என்றும், பாரத அன்னே என்றும் நாம் அழைக்கிருேம். சுவாமி விவேகானந்தர் 'புண்ணிய பூமி' என்று இந்தியாவைக் குறிப்பிட்டிருக்கிருர். இவை வெறும் உபசார வார்த்தைகள் அல்ல. நமது ஞானிகளும் ரிஷிகளும் பாரதத்தைச் சக்தியின் அம்சமாகவே கண்டு வணங்கி வந்துள்ளனர்.

சக்தி எனப்படும் அம்பிகையின் ஒவ்வோர் அம்சமும் இந்தியாவின் ஒவ்வொரு பகுதியில் இருந்து அருள்புரிகின்றன.

கல்கத்தாவும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளும் மகாகாளியின் அம்சமாகும். எனவே அங்கே காளி வழிபாடும் தாந்திரிகச் சாஸ்திரங்களும் மேலோங்கி உள்ளன.

அதற்கடுத்த மகாராஷ்டிரமும் அதைச் சுற்றியுள்ள பகுதிகளும், மகாலட்சுமியின் அம்சமாகவும் அவளது ஆட்சிக்கு உட்பட்ட பகுதியாகவும் திகழ்கின்றன. அதனுல் அந்தப் பகுதியில் செல்வச் செழிப்பு மிகுந்து காணப்படுகிறது.

தெற்கே விந்தியமலேக்குக் கீழ் உள்ள பகுதி மகாசரஸ்வதியின் அம்சமும் அவளது ஆட்சியும் உள்ள பகுதியாகும். அது காரணமாக இந்தப் பகுதிகளில் கலே, ஞானம் ஆகியவை மேலோங்கிக் காணப்படுகின்றன. தென்னிந்தியாவில்தான் ஆசாரியர்களும், எண்ணற்ற ஞானிகளும், நாயன்மார்களும், ஆழ்வார்களும் தோன்றியுள்ளனர். கலே அம்சமான கோயில்களும் நிறையக் காணப் படுகின்றன.

இந்த மூன்று சக்திகளுக்கும் மூலமாக விளங்கும் பிரம்மசக்தியான மகேச்வரியின் அம்சம் காஷ்மீர் பகுதியாகும்.

இந்தச் சக்தி அம்சங்களுக்குத் தகுந்தவாறு அந்த அந்தப் பகுதிகளில் நவராத்திரி நாயகிகளுக்கு முக்கியத்துவம் தந்து வழிபடுகின்றனர். இதுவே கல்கத்தாவில் காளிபூஜையும், பம்பாய்ப் பகுதியில் லட்சுமிபூஜையும், தெற்கே சரஸ்வதி பூஜையும் நவராத்திரி சமயத்தில் சிறப்பாக நடைபெறுவதற்குக் காரணமாகும்.

கேள்வி: சுவாமிமலே என்பது இடுகுறிப்பெயரா, காரணப் பெயரா?

பதில்: இலக்கணம் சம்பந்தமான கேள்விகளுக்கு ஆன்மிக வினு-விடைப் பகுதியில் விஜயத்தில் இடம் இல்லே. இது போன்ற கேள்விகளேத் தாங்கள் கி.வா.ஜ. அவர்களுக்குத்தான் அனுப்ப வேண்டும். எனினும் இந்தக் கேள்வி முருகனேப் பற்றியதாக இருப்பதால் பதில் அளிக்கப்படுகிறது.

சுவாமிமலே என்பது காரணப் பெயர்தான். முருகன் சிவபெருமானுக்குப் பிரணவத்தை உபதேசித்தான். அப்போது தமக்குக் குரு நிலேயில் இருந்த குமரக் கடவுளிடம், ''நீயே என் சுவாமி. எனவே இந்த இடம் சுவாமிமலே எனப் பெயர் பெறும்'' என்று சிவனுர் கூறியதாகப் புராண வரலாறு இருக்கிறது.

சுவாமி என்பதற்குத் தலேவன் என்பது பொருள். தந்தைக்குத் தலேவனுக முருகன் நின்ற இடம் சுவாமிமலே ஆயிற்று.

சுவாமி என்பது சிறப்பாக முருகப் பெருமானேயே குறிக்கும் என்று பாம்பன் சுவாமிகள் குறிப்பிட்டுள்ளார். உதாரணமாகக் குமார சுவாமி, சுப்பிரமணிய சுவாமி, கந்தசாமி, சுவாமிநாதன், வேலுச்சாமி போன்ற பெயர்களேக் கூறலாம்.

ஒப்பற்ற தலேவன் என்ற கருத்தில் முருகனே ஒட்டி வந்த சுவாமி என்ற சொல் பிற்காலத்தில் பிற தெய்வங்களேக் குறிக்கவும் பயன்படுத்தப் பட்டது. ○

# அருள் புரிந்த அன்னபூரணி



பகவான் ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்களுள் ஒருவர் சுவாமி இராமகிருஷ்ணானந்தர். இவரே சென்னையில் இராம கிருஷ்ண மடத்தை நிறுவியவர்.

இராமகிருஷ்ணானந்தர் மயிலாப்பூர் மடத்தில் இருந்த சமயம். அப்போது ஸ்ரீராமகிருஷ்ணரின் ஜயந்தி விழா நெருங்கிக்கொண்டிருந்தது.

ஒரு நாள் மாலை ஐந்து மணி இருக்கும். பக்தர் ஒருவர் மடத்தில் சுவாமி இராமகிருஷ்ணானந்தரிடம் பேசிக்கொண்டிருந் தார். அந்தப் பக்தரின் மனதில் ஒரு பெரிய கவலை குடிகொண் டிருந்தது. அதை அவரால் மனதிலேயே அடக்கிக் கொள்ளவும் முடியவில்லை.

எனவே அந்தப் பக்தர், ''சுவாமிஜி! நாளைத்தினம் பரமஹம்சரின் பிறந்த நாள். அதை முன்னிட்டு நாளைத்தினம் ஏழைகளுக்கு அன்னதானம் செய்வதாக ஊர்முழுவதும் அறிவித்து விட்டோமே. மடத்திலே பார்த்தால் ஒரு மூட்டை அரிசி கூடக் காணோமே! இந்த நிலையிலே நாம் என்ன செய்வது?'' என்று இராமகிருஷ்ணா னந்தரிடம் கேட்டார்.

அதற்கு அந்தப் பக்தரிடம் இராமகிருஷ்ணானந்தர், ''நீங்கள் விவேகத்தை விட்டுப் பேசுகிறீர்கள். ஏன், அன்னபூர்ணா தேவியிடம் உங்களுக்கு நம்பிக்கை அற்றுவிட்டதா? அவளுடைய குழந்தைகளுக்கு அவள் உணவு அளிக்காமலா போய்விடுவாள்? அவள்மீது பாரத்தையெல்லாம் போட்டுவிட்டு நாம் கவலையற்று இருப்போம். அவள் எதைத்தான் செய்யமாட்டாள்! அவளுக்கு இயலாதது ஒன்று இருக்கிறதா?'' என்று அமைதி ததும்பக் கூறிவிட்டு நிம்மதியாக இருந்தார்.

பக்தரின் காட்சியிலோ கற்பனையிலோ அன்னபூரணியின் கிருபை வந்து சேருவதற்கு உரிய அறிகுறி எதுவும் காணோம். மறுநாள் அன்னதான நிகழ்ச்சி திட்டமிட்டபடி நடைபெறாமல் போய்விடுமே என்ற வேதனைதான் அவரை வாட்டியது.

ஆனால் சுவாமி இராமகிருஷ்ணானந்தரும் அந்தப் பக்தரும் இவ்விதம் பேசிக்கொண்டிருந்தபோதே சில மாட்டுவண்டிகள் மடத்திற்குள் நுழைந்தன. அரிசி மூட்டைகள், மளிகைச் சாமான்கள், காய்கறி மூட்டைகள் ஆகியவை அந்த வண்டிகளிலிருந்து கீழே இறக்கப்பட்டன. அன்னதானத்திற்காகப் பல அன்பர்கள் உதவிய பொருள்களே அவை.

'நம்பினோர் கெடுவதில்லை; கடவுளின் கிருபை எந்நாளும் தவறாது' என்ற உண்மையை இவ்விதம் கண்ணெதிரில் கண்ட அந்தப் பக்தர் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தார். இராமகிருஷ்ணானந்தருக்குப் பின் நின்று தெய்வசக்தி அவரை ஆட்கொண்டும் இயக்கியும் வந்ததை அவர் அன்றைத் தினம் தெளிவாக உணர்ந்தார்.

